உ

அருள்திரு தேவி கருமாரியம்மன் துணை

# திருவெம்பாவை

## திருப்பள்ளியெழுச்சி

## திருப்பாவை

(உரையுடன் கூடியவை)



அருள்திரு தேவி கருமாரியம்மன் திருக்கோயில்
திருவேறகாடு சென்னை-77

அன்பளிப்பு:

1986—87

# அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக்கோயில்

திருவேற்காடு : சென்னை-77

தொலைபேசி எண் : 69630
69687



தேவி கருமாரியம்மன்

ஓம்

# திருவெம்பாவை

## (சத்தியை வியந்தது)

---

*[வெண்டளையால் வந்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா]*

*திருச்சிற்றம்பலம்*

### கன்னிப்பெண் சிலர் மற்றோர் கன்னிப்பெண்ணை எழுப்புதல்

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்என் னேஎன்னே
ஈதேஎந் தோழி பரிசேலோர் எம்பாவாய்.

(பொருள்) வாள்...மாதே-ஒளி பொருந்திய பெரிய கண்களையுடைய நங்காய், ஆதியும்...சோதியை - தொடக்கமும் முடிவும் இல்லாத அரியபெரிய இயல்பாய் உள்ள ஒளியுருவாம் இறைவனை, யாம் ... கேட்டேயும் - யாங்கள் புகழ்ந்து பாடக் கேட்டுக் கொண்டும், வளருதியோ - தூங்குகின்றாயோ, வன்...செவிதான் - அல்லது நின்செவிகள்தாம் செவிடோ, வீதிவாய் - தெருவில், மாதேவன் ... கேட்டலுமே - சிவபெருமானுடைய திருவடிகளை வாழ்த்திய வாழ்த்தொலி சென்று கேட்ட அளவில், போது... புரண்டு - மலர் பரப்பிய படுக்கையினின்றும் புரண்டு எழுந்து, விம்மி...மறந்து - தேம்பித் தேம்பி அழுது தன்னை மறந்து, இங்ஙன்...கிடந்தாள்-ஒன்றுக்கும் முடியாமல் இப்படிக் கிடந்தாள், ஈதே...பரிசு - எங்கள் தோழியே இதுவோ உன் தன்மை! என்னே என்னே—வியப்பு வியப்பு. எம்பாவாய் - நோன்புத் தெய்வமாகிய பார்வதியம்மை. (க)

(விளக்கம்) 'அரும் பெரும் சோதி' இறைவன் சிறப்பியல்பு. மாதேவன் இறைவன் பொது இயல்பு. சிறப்பியல்பு - சொரூபலக்கணம். பொது இயல்பு-தடத்தலக்கணம். ஏலும் ஓரும்-அசை.

திருவெம்பாவை

## எழுந்தவளோடு எல்லோரும் சென்று மற்றொரு பெண்ணை எழுப்புதல்

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்
பேசும்போ தெப்போது இப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசி இவையுஞ் சிலவோ விளையாடி
ஏசு மிடம்ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோர் எம்பாவாய்.

(பொருள்) நேரிழையாய்-சிறந்த அணி அணிந்த பெண்ணே, நாம்...எப்போதும் - நாம் பேசும்பொழுதெல்லாம், பாசம்... பகல் - இரவும் பகலும் என் அன்பு பேரொளிக் கடவுளுக்கே என்று சொல்லுவாய், இப்போது ... வைத்தனையோ - இப்பொழுது மலர் பரப்பிய படுக்கையினிடத்து அன்பு வைத்தாயோ? (என்று வந்த பெண்கள் கூற,) நேரிழையீர் - தோழியர்களே! சீசி...சிலவோ - உங்கள் வாயில் இகழ்வுச் சொல்லும் சில உண்டோ, விளையாடி...ஈதோ-விளையாடிப் பழிக்குங் காலமும் இதுவா, (என்று எழுந்த பெண்கூற வந்த பெண்கள்.) கூறுகின்றார்கள். விண்ணோர்கள்.....பாதம் - தேவர்கள் பாராட்டக் கொடுத்தருள நாணும் பூப்போன்ற திருவடிகளை, தந்தருள... தேசன் - எளியவர்களாகிய நமக்கருள வந்த ஞானாசிரியனும், சிவலோகன் ... ஈசனார்க்கு - கயிலாயத்துள்ளவன், தில்லைச் சிற்றம்பலத்து ஆண்டவனுக்குச் செய்யப்படும், அன்பு...ஆர் - அன்பு எப்படியுள்ளது, யாம் எந்நிலையினோம்?

(விளக்கம்) பேசும்போது - உரையாடும் ஒருகாலம். எப போதும் - உரையாடும் பலகாலம். இதிலுள்ள உம்மை திரிபால் தொக்கது. பாசம் - பத்தி. அமளிக்கே - இதிலுள்ள ஏகாரத்தைப் பரஞ்சோதிக்கு என்பதனோடு கூட்டுக. 'இராப்பகல்' என்பதில் இரவை முற்கூறியது இளைப்பாறும் இரவிலும் பத்தி வைப்பதைக் குறிப்பதாகும். கூசுதல் - நாணுதல். "பொக்கமிக்கவர் பூவுநீ ருங்கண்டு, நக்கு நிற்பன் அவர்தமை நாணியே" என்பது அப்பர் தேவாரம். பொக்கம் - குற்றம்; நிலையாப் பொருள் ஆசை. தேவர்கள் பிறப்பை விரும்புவோர். சிறப்பை விரும்பும் சுந்தரர் திருமுடியிலும் அப்பர் திருமுடியிலும் வலியத் திருவடி சூட்டினன். தேசன் - ஒளியுருவன். (உ)

## வழக்கமாக எதிரேற்கும் பெண் தூங்குங்கால் எழுப்புதல்

முத்தன்ன வெண்நகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்.
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்.

(பொருள்) முத்தன்ன...நகையாய் - முத்துப்போலும் வெண்மையான பற்களையுடைய பெண்ணே, முன்...எழுந்து - முற்காலத்தில் எங்களுக்குமுன் விழித்தெழுந்து வந்து, என் அத்தன்...பேசுவாய் - எனக்குத் தந்தை, இன்ப வடிவினன் அழிவில்லாதவன் என்று வாயூறி இனிக்கப் பேசுவாய், வந்து...திறவாய் - இப்பொழுது எழுந்து வந்து உன் படுக்கை அறைக் கதவையும் திறக்கின்றாய் இல்லை, (ஈது என்னை? என்று எழுப்பவந்தவர் கூற எழுந்தவள் கூறுவது.) பத்துடையீர்...பொல்லாதோ - பேரன்புடையீர் ஆண்டவன் பழஅடியீர் எனக்குத் தோழமை உடையீர் புதிய அடிமையாகிய எங்கள் குற்றத்தை நீக்கி ஆட்கொண்டால் தீங்காகுமோ, (மேல் எழுப்பியவர் கூறுவது.) எத்தோ...அறியோமோ - உன் அன்புடைமை வேறு எது ஆகும் நாங்கள் அதனை அறியமாட்டோமா, சித்தம்...சிவனை - மனநன்மையுடையார் நம் சிவபெருமானைப் புகழ்ந்து பாடாதிருப்பார்களோ, இத்தனையும்...எமக்கு - அழைக்கவந்த எங்களுக்கு இவ்வளவும் வேண்டியதே.

(விளக்கம்) 'முத்தன்ன வெண்ணகையாய்' என்னும் விளி அப்பெண் முற்காலங்களில் எழுந்து தூயளாய் நீறணிந்து வெளிப்படுவாள் என்னும் குறிப்பாகும். முன் - காலம். எதிர்வந்து - தெருவில் எதிர்வந்து. 'என் அத்தன்' என்பது சிறப்புரிமை குறிப்பது. ஆனந்தன் - இன்பவடிவினன். தந்தையின் செல்வம் மக்கட்கு உரியதல்லவா? அதுபோல் ஆண்டவன் திருவடியின்பம் ஆவிகளுக்கு உரியது. அம்முறை தோன்ற 'அத்தன்' என்பதன்பின் 'ஆனந்தன்' என்றனள். அமுதன் - அழியாதவன். பத்து - பத்தி. பத்துப் பண்புகள் எனின் 'முன்னம் அவ னுடைய' என்னும் திருமுறைப்பொருள் பத்துமாம். 'இத்தனையும் வேண்டும்' என்னும் குறிப்புமொழி உன்னைத் தோழமை உடைமையிற் சொன்னதைப் பொறுத்தாயல்லை என்பதாகும். (3)

## தூக்க விருப்பம் மிகுந்த பெண்ணை எழுப்புதல்

ஒண்ணித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவுங்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாம்மாட்டோம் நீயேவந்
தெண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய்.

**(பொருள்)** **ஒள்நித்...புலர்ந்தின்றோ** ஒளி பொருந்திய முத்துப்போன்ற பற்களையுடைய பெண்ணே! இன்னும் விடிய வில்லையா, (இவ்வாறு எழுப்பியவர்கள் சொல்ல எழுப்பப் பட்டவள் படுக்கையில் கிடந்தபடியே சொல்லுவது.) **வண்ணக்... வந்தாரோ** - அழகிய கிளிபோல் பேசும் பெண்கள் எல்லாரும் வந்தனரா, (எழுப்பவந்தவர் கூறுவது.) **எண்ணிக்கொடு... போக்காதே** - எண்ணிப் பார்த்து உள்ளபடி சொல்லுவோம் அவ்வளவு நேரமும் கண்ணை மூடிக்கிடந்து வீண்காலம் போக்காதே, **விண்ணுக் ... பாடி** - தேவர்களுக்கு ஒப்பில்லாத அமிழ்தம், மறை ஆகமங்களில் சிறந்த பொருள், ஆகவுள்ளவன் கண்ணுக்கு இனிய திருமேனியுடன் கூடிவந்தவன் ஆகிய சிவனைப் புகழ்ந்து பாடி, **கசிந்து ... நின்றுருக** - உள்ளம் அசைவற நின்று நெகிழ்ந்து கசிந்து உருகுவாயாக, (இதற்கும் எழாதது கண்டு மேலும் கூறுகின்றனர்.) **யாமாட்டோம் ... துயில்** - வந்தவர்களை எண்ணிக் கணக்குச்சொல்ல இசையாது நீ கணக்கிட்டுப்பார், குறைந்தால் திரும்பவும் போய்த் தூங்கு.

**(விளக்கம்)** புலர்ந்தின்று - புலர்ந்தது இன்று; விடியவில்லையா, புலர்ந்தின்றோ: ஓகாரம் வினா, எதிர்மறையும்ஆம். வந்தாரோ: ஓகாரம் வினா. இவ்வினா தூக்கவிருப்பத்தைக் காட்டும். உள்ளவா- உள்ளவாறு. கொடு - கொண்டு. துயின்று - துயில்வித்து; பொய்யுறக்கம் கொண்டு. மருந்து - அமிழ்தம்; சிவபெருமான் ஒருவனே அழிவில்லாத பேரின்பம் தருபவன். வேத விழுப் பொருள் - நூலுணர்வால் பொதுமையில் உணரத்தக்கவன். கண்ணுக்கு இனியான் - மெய்யுணர்வால் சிறப்பாக உணரத்தக்க வன். கண் - உணர்வு. பாடலால் விழுப்பொருளும், உருகலால் இனியானும் பெறப்படும். உருகுக என்பது உருக என்றாயிற்று. எண்ணிக் குறைந்தால் திரும்பத் தூங்கு என்பது எழுந்தவள் திரும்பத் தூங்க இசையாள் என்னும் நயக்குறிப்பாகும். (௪)

## சொல்லும் பொருளும் ஒவ்வாமை சொல்லி எழுப்புதல்

மாலறியா நான்முகனுங் காணா மலையினை நாம்
போலறிவோம் என்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்று
ஓலம் இடினும் உணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய்.

(பொருள்) மால் ... மலையினை - திருமால் அறியாத திருவடியையும் நான்முகன் அறியாத திருமுடியையும் உடைய மலை உருவாய் நின்ற இறைவனை, நாம் ... பொக்கங்களே - நாம் உணர்வோம் என்றுள்ள பொய்களையே, பேசும் ... படிறீ - சுரக்கின்ற பாலையும் தேனையும்போல் இனிமை தோன்றப் பேசும் வஞ்சகீ, கடை திறவாய் - கதவைத் திறப்பாயாக, ஞாலமே ... கோலமும் - மண் உலகத்தார் விண் உலகத்தார் பிறவுலகத்தார் ஆகிய யாராலும் அறிய முடியாத நம் கருமேனி அழிக்கவந்த அவன் திருக்கோலமும், நம்மை ... பாடி - எளியவர்களாகிய நம்மை அடிமைகொண்டு பெருமைப்படுத்தும் அருட்குணத்தையும் புகழ்ந்து பாடி, சிவனே ... இடினும் - சிவபெருமானே சிவபெருமானே என்று ஓலமிட்டுக் கூவியும், உணராய் - அறிந்திலை, உணராய் - விழித்து எழுந்தாய் இல்லை, ஏலக் ... பரிசு - மயிர்ச் சாந்தணிந்த கூந்தலுடையாய் நின் தன்மை என்னே !

(விளக்கம்) கல்விச் செருக்கும் செல்வச் செருக்கும் முறையே 'யான் எனது என்னும் செருக்'காகும். நான்முகன் மால் என்னும் தேவர்கள் இவ் இருவகைச் செருக்கும் இயல்பாகவே உடையவர். இறைவன் ஒளிமலையாகத் தோன்றியும் முறையே முடியையும் அடியையும் இவர்களால் உணர முடியவில்லை. மாலின் ஆற்றல் திருமகள். மால் - செல்வ மயக்கம். நான்முகன் ஆற்றல் நாமகள். நான்முகன் - அறிவைப் பலமுகப் படுத்தியவன். இவ்விருவரும் இருபத்து நான்காம் தத்துவமாகிய குணதத்துவத்திருக்கும் உயிர்கள். இவர்கள் மும்மலக் கட்டுடையவர்கள். அதனால் சகலர் எனப்படுவர். இவர்கள் பிறப்பென்னும் பேதைமை நீங்காதவர்கள். சிறப்பென்னும் செம்பொருளை எங்ஙனம் காண்பர்? கோலம் - திருமேனி. சீலம் - அருட்குணம். உருவிலா இறைவன் திருவுருக் கொள்ளுதல் உயிர்கள் உய்ய. அதனால் திருவுருவ வழிபாடே சிறந்தது. (ரு)

## சொன்னபடி நடவாமை சொல்லி எழுப்புதல்

மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவன் என்றலும் நாணாமே
போன திசைபகராய் இன்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே உருகாய் உனக்கே உறுமெமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோர் எம்பாவாய்.

(பொருள்) மானேநீ...என்றலுமே - மருள்நோக்கால் மான் போன்றவளே! நேற்று நீ நாளை வந்து உங்களை நானே எழுப்புவன் என்ற அளவிலே (போய்விட்டாய்), நாணாமே...புலர்ந்தின்றோ - நேற்று உரைத்தசொல் நாணாமல் போனதிசையைச் சொல் இன்னும் இருள் விடியவில்லையா, வானே.. அரியான்- விண்ணவர் மண்ணவர் பிற உலகோர் ஆகிய எவரானும் அறிய முடியாத சிவபெருமான், தானே...வந்தோர்க்கு - வலிய வந்து நம்மை ஆட்கொள்ளுதற்குரிய அழகிய நீண்ட வீரக்கழல் அணிந்த திருவடியைப் புகழ்ந்து பாடிவந்த எமக்கு, உன்.. உறும் - உன் வாயைத் திறக்கின்றாயில்லை உடல் உருகுகின்றாயில்லை, இந்நிலை உனக்குத்தான் பொருந்தும், எமக்கும் ..பாடு - எங்களுக்கும் மற்றெல்லோர்க்கும் தலைவனாகிய சிவனைப் பாடுவாயாக.

(விளக்கம்) மான் - அச்சத்தால் நிகழும் மருண்டபார்வைக் குறிப்பு. நென்னலை-ஐ,சாரியை. கடவுள் காட்சியளிக்கும் இடம், நிலமாதல்பற்றி முன்பாட்டில் ஞாலத்தை முற்கூறினர். வானத்திற்கு அப்பாலுள்ள சிவலோகத்திலிருந்து வரும் வழி வானாதல் பற்றி இதில் வானை முற்கூறினர். வலியவந்து நம்மைச் செம்மைப் படுத்தி ஆண்டது அவனது பேரருள். திருவடி - அருளால் யான் எனது என்னும் செருக்கற்ற இடம். வான் - அழகு. திறவாய் - திறவாமல் இருக்கின்றாய். உனக்கே - ஏகாரம் பிரிநிலை; தேற்றமுமாம். உருகாமல் பாடாமல் இருக்கும் இச்செயல் உனக்கே பொருந்தும். இப்பாட்டில் எழுப்பப்பட்டவர் பேதைப் பருவத்தினராவர், இதனை 'மானே' என்னும் விளியும், இரண்டு மூன்று நான்காம் திருப்பாட்டுக்களில் எழுப்பப்பட்டவர் மாற்றங் கூறியதுபோல் இவள் கூறாமையும் புலப்படுத்தும். ஐந்தாம் திருப்பாட்டில் அறிவும் அறியாமையும் பலப்படுகின்றன. அவர்கள் பெதும்பைப் பருவத்தினராவர். (௬)

## வன்னெஞ்சப் பேதைபோல் கிடப்பாளை எழுப்புதல்

அன்னே யிவையுஞ் சிலவோ பலஅமரர்
உன்னற் கரியான் ஒருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
தென்னாஎன் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்
என்னானை என்னரையன் இன்னமுதென் றெல்லோமுஞ்
சொன்னோங்கேள் வெவ்வேறாய் இன்னந் துயிலுதியோ
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய்.

(பொருள்) அன்னே - தாயே, இவையும் . அரியான் - (அன்பினால் இறைவனிடத்து ஈடுபடுதலும் அன்பிலான்போல் உறங்கலும் ஆகிய மாறுபட்ட) இச்செயல்களும் சில உளவோ நால்வேறு பிரிவில் பலவகைத் தேவர்களாலும் நினைத்தற்கும் அரியவனும், ஒருவன்...சீரான் - ஒப்பற்றவனும் மிகுந்த பெருமையுடையவனும் ஆகிய இறைவனை நினைவுறுத்தும், சின்னங்கள்...வாய் திறப்பாய் - எக்காளம் சங்கு முதலியவற்றின் ஒலிகளைக் கேட்ட அளவில் 'சிவசிவ' என மொழிந்துகொண்டே வாயைத் திறப்பாய், தென்னா...ஒப்பாய் - தென்னவனே என்று பிறர் சொல்லு முன் தீ சேர்ந்த மெழுகுபோல் உருகுவாய், என்னானை...வெவ்வேறாய் - என் தந்தை என் மன்னன் இனிய அமிழ்தம் என்று தனித்தனியாகவும் எல்லோரும் சேர்ந்தும் கூறினோம்; அவற்றைக் கேட்பாய், இன்னம் ... கிடத்தி - இன்னும் தூங்குகின்றாயோ உருகும் நெஞ்சில்லாத அறிவிலார்போல் சும்மா கிடக்கின்றாய், என்னே ... பரிசு - உறக்கத்தின் தன்மை எவ்வளவு.

(விளக்கம்) 'சிவசிவ' ஐந்தெழுத்தாம் நான்மறை. தென்னவன் - தென்னாடுடைய சிவன். பேரன்பினர் அடையாள ஒலி கேட்டதும் 'சிவசிவ' என்னும் மறை மொழிவர். சிவன் புகழ் கேட்டதும் நெஞ்சம் நெக்குருகுவர். 'என்னானை'-(என் + ஆன் + ஐ) ஆன், சாரியை; ஐ - தந்தை. தந்தை, சிறப்புரிமைக்காவல். மன்னன், ஆட்சிப் பொதுக்காவல். எழுப்பப்பட்டவள், பேதைப் பருவத்தினள். சிறந்த அறிவினள். இஃது ஒக்குபண்பெட்டில் ஏழாவதாகிய 'முடிவிலாற்றலுடைமை'யின் குறிப்புணர்த்துவதாகும். தூங்கும் பேதைப் பருவத்துச் சிறுபெண்ணை 'அன்னே' என இனிய மொழியால் விளித்து இன்புறுத்தி உடனழைத்துச் சென்று நீராட்டி நோன்பிருக்கச் செய்யும் அருள் திறனால் விளங்கும். 'நயனீன்று நன்றி பயக்கும்' பயனளிப்பதல்லவா இன்சொல்.

(எ)

## இறைபுகழ்கேட்டுக் கண்திறந்தும் பாடாதாளை எழுப்பியது

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்குங்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய்.

• (பொருள்) கோழி...எங்கும் - கோழிகூவ எங்கும் காக்கை முதலிய பறவைகள் கூவும நாகசுரம் இசைக்க எங்கும் வெள்ளிய சங்குகள் ஒலிக்கும், கேழில் ... பாடினோம் - ஒப்பற்ற பேரொளி உருவினனுடைய சிறந்த பேரருட் புகழ் அமைந்த திருமுறைகளை வாயாரப் பாடினோம், கேட்டிலையோ - கேட்டாய் அல்லையோ? வாழி - வாழ்வாயாக, ஈது...வாய்திறவாய் - ஈது என்ன தூக்கம் நின்வாயைத் திறக்கின்றாயல்லை, ஆழியான்... இவ்வாறோ - பேரருட் பெருங்கடலாகிய சிவபெருமான் மாட்டுச் செய்யும் அன்புநெறியும் இம்முறைதானோ? ஊழி...ஒருவனை - பேரூழியில் தலைவனாய் அழிவில்லாது கங்காளம் தோள்கொண்டு நிற்கின்ற ஒருவனும், ஏழை...பாடு - அம்மையை ஒரு கூற்றில் உடையவனும் ஆகிய பெருமானை (இனியாவது) பாடுவாயாக.

(விளக்கம்) இவ் எட்டுத் திருப்பாட்டுக்களும் ஆவிகளை இயைந்தியக்கும் இறைவனுடைய ஓங்கு பண்பு எட்டினையும் குறிக்கும் என்க. இறைவன் ஆற்றல்கள் ஒன்பதினுள் முதலாற்ற லின் விரியாகிய எட்டு ஆற்றல்களையும் உணர்த்தும் என்ப. கதிர்மணி விளக்கம் 'மங்கை பெதும்பை பேதைப் பருவப் பெண்பாலாரை உணர்த்தும்' என நுண்ணிதின் உரைக்கும். ஆழியான் - அருட்கடலாம் சிவபெருமான். திருமால் எனக் கொண்டு அவன் சிவபெருமான் இடத்துச் செய்யும் அன்பும் (அறிதுயில்) இப்படித்தானோ? எனலும் ஆம். எட்டிலும் கொள்ளும் பருவப்பெண்களின் அகவை முறையே கஉ, கக, க0, கூ, அ, எ, சு, ரு. முதற்பாட்டில் குறிக்கும் பெண் மங்கைப்பருவத்தினள். இரண்டு, மூன்று, நான்கு, ஐந்தாம் பாட்டில் குறிக்கும் பெண்கள் பெதும்பைப் பருவத்தினர். ஆறு, ஏழு, எட்டாம் பாட்டில் குறிக்கும் பெண்கள் பேதைப் பருவத்தினர். பேதைப் பருவத்தினரையும் பாவை நோன்பிற் பழக்கிப் பயன் எய்தச் செய்யும் நம் பண்டையோர் பண்பு எத்துணைச் சிறந்தது! (அ)

## எழுப்பியவர் எழுப்பப்பட்டவர் எல்லாரும் இறையை வழுத்துதல்

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவ ராவார் அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோன் நல்குதியேல்
என்ன குறையு மிலோமேலோர் எம்பாவாய்.

(பொருள்) முன்னைப் ... பொருளே - முன்னுள்ள மாயா காரியப் பழம் பொருள்களுக்கெல்லாம் வினைமுதற் காரணப் பழம்பொருளே, பின்னைப் ... பெற்றியனே - பிற்பட்ட புதுப் பொருள்களுக்கும் புதுப்பொருளாம் தன்மையனே, உன்னைப் ... சீரடியோம் - உன்னை ஆண்டவனாகக் கிடைக்கப்பெற்ற உன் சிறந்த அடிமைகளாகிய யாங்கள், உன்னடியார் ... ஆவோம் - நின் அடியாருடைய திருவடிகளை வணங்குவோம்; அப்படியே அவர்க்கு உரிமையுடையவராவோம், அன்னவரே ... பரிசே - அவ் வடியார்களே எங்களுக்குக் கணவராவர் அவர் உவந்து இட்ட கட்டளைப்படியே, தொழும்பாய் ... செய்வோம் - அடிமையாய் நின்று ஏவல்பணி செய்வோம், இன்ன ... நல்குதியேல் - எங்கள் பெருமானே நீ எங்களுக்கு இங்ஙனமே அருள்புரிவாயானால், என்ன ... இலோம் - எத்தகைய குறைபாடும் இல்லாதவராவோம்.

(விளக்கம்) ஒரு மூன்றும் பிழம்பாகிய அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்றினுள் அருவநிலை குறிப்பது இது. அருவம் கண்ணுக்குத் தெரியாத உருவம். முழுமுதற்பொருள் எல்லாவற்றிற்கும் அப்பாலுள்ளது. இது பழம்பொருள் என்பதனால் விளங்கும். சிவம், சத்தி, நாதம், விந்து ஆகிய நான்கு மெய்களையும அருவத் திருமேனி என்ப. சிவம் - அறிவு. சத்தி - ஆற்றல். நாதம், விந்து ஆண்டான் ஆவிகளுக்கு அறிவையும் ஆற்றலையும் இயைந்து விளக்கும் நிலை. வேண்டும் பயன் குறிப்பதும் இது. கணவர் - கண் அன்னவர்; வாழ்க்கைத் துணைவர்; திருவடி வாழ்க்கைக்குக் கண்போன்று நடத்துபவர். பழம்பொருள் - கால தத்துவத்துக்கு அப்பாற்பட்டவன். புதுமை - புதுப்பொருள்தன்மை. சிவனடியார் வணக்கம், சிவ வணக்கமே. இதுவே "தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை" என்பது. பெண்கள் "மழைக்குதவும் பெருங்கற்பிற் மனைக்கிழத்தியராவர்" என்பது திருமுறை. (௯)

## இடத்தாலும் அப்பாற்பட்ட இறைவை வழுத்துதல்

பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற்பிணாப் பிள்ளைகாள்
ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய்.

(பொருள்) பாதாளம் ... முடிவே - இறைவன் திருவடிமலர் கீழ் உலகம் ஏழினுக்கும் கீழாகச் சொல்லுக்கு அடங்காத நிலையினது மலர் அணிந்த திருமுடியும் எல்லாப் பொருள்களின் முடிவாக உள்ளது, பேதை ... அல்லன் - பெண் ஒரு கூற்றில் உடையவன் ஒருவக்கப்பட்ட திருமேனியை உடையவன் அல்லன், வேதமுதல்...உளன் - உலகியல் மறையும் விண்ணோரும் மண்ணோரும் பாராட்டினாலும் புகழ்ச்சியைக் கடந்த ஒப்பற்ற தோழனாக உள்ளான் தன் மெய்யடியார்கட்கு, கோதில்...பிள்ளைகாள் - அரன் திருக்கோயிலிலுள்ள குற்றமற்ற நலம்சேர்ந்த பெண்மக்களே!, ஏதவனூர்...அயலார் - அவன் ஊர் எது? அவன் பேர் எது? அவனுக்கு உறவினர் யாவர்? அயலார் யாவர்?, ஏது...பரிசு - அவ் இறைவனைப் புகழ்ந்துபாடும் தன்மை யாது?

(விளக்கம்) இஃது அருஉருவநிலை குறிப்பது. 'ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உரு ஒன்றாதலால் அருஉருவ (சதாசிவ) நிலை என்க.' இஃது அரியும் அயனும் அடிமுடி தேடிய குறிப்பினைக் கொண்டது. எல்லாம் கடந்தவன் ஆனாலும் தொண்டருக்குத் தோழன். சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நன்னெறி நான்கில் செறிவு நெறி என்பது யோக நெறியாகும். யோகநெறியினர் அவன் உருப்பெறுவர். செறிவு நெறியினை மேற்கொண்டு விளக்கியவர் நம்பியாரூர். ஒருபுடை யொப்பாக ஒன்றும் நிலைக்குச் சம்பந்தரும், வேறாம் நிலைக்கு அப்பரும், உடனாம் நிலைக்குச் சுந்தரும் விளக்கினர் எனலாம். "யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாய்" எனச் சுந்தரர் மொழிவதும் காண்க. தோழம்-பேரெண். தோழந்தொண்டர் மிகுதியான தொண்டர் என்றலும் ஒன்று. பிணா - பெண். பிள்ளை - மக்கள். குலம் - நன்மை 'உலகமே உருவமாக' உடையவனுக்கு ஊர் எது? பேர் முதலியனவும் அப்படியே. இறை பணியாளருக்கு நண்பனாதலின் வேறு உறவு பகை யாதுமல் கிடையா. (௧௦)

## வழிவழி அடியார் வழுத்தி நீராடுதல்

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போல்
செய்யாவெண் நீறாடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பாய் எமையேலோர் எம்பாவாய்.

(பொருள்) மொய்யார் ... பாடி - வண்டுகள் நிறைந்த விரிவான திருக்குளத்தில் புகுந்து முகேர் என்னும் ஒலி உண்டாகும் படி கையினால் இறைத்துத் திருவடிகளைப் புகழ்ந்து பாடி முழுகி, ஐயா ... காண் - எங்கள் தலைவனே வழிவழி அடிமைகளாகிய யாங்கள் நல்வாழ்வு பெற்றோம், ஆரழல் ... மணவாளா - செறிந்த தீப்போன்ற செம்மைநிறம் உடையவனே வெள்ளிய திருநீற்றை முழுவதும் அணிந்தவனே பேரின்பப் பெருந்திரு வுடையவனே சிறிய இடையையும் பெரிய மைதீட்டப்பெற்ற கண்களையும் உடைய உமையம்மையின் கணவனே, ஐயாநீ...விளையாட்டின் - ஆண்டவனாகிய நீ உயிர்களை அடிமைகொண்டருளும் திருவிளையாட்டினால், உய்வார்கள்...உய்ந்தொழிந்தோம்-உய்திபெறுவார் உய்யும்வகை எல்லாவற்றானும் பிழைத்துவிட்டோம், எய்யாமல் ...எமை-இனி யாம் இளைத்துவிடாதபடி எம்மைக் காத்தருள்வாயாக.

(விளக்கம்) இது 'வெண்ணீறாடி' என்பதாலும் மணவாளா என்பதாலும் உருவத்திருமேனி குறிப்பதாகும். ஆர்அழல், செம்மைநிறம். இது படைப்பைக் குறிக்கும். வெண்ணீறு, வெண்ணிறம். இது காப்பைக் குறிக்கும். நீறு, துடைப்பைக் குறிக்கும். இம்மூன்றும் முக்குணங்களின் நிறமாகும். 'செல்வா' என்றதனால் யோகமும், 'மணவாளா' என்றதனால் போகமும் குறிக்கப்பெற்றன. விளையாட்டு - வருத்தமின்றிச் செய்தல். எய்யாமல் - சலியாமல். முத்திற மேனிப்பிழம்பும் ஆண்டவன் உடையன். அதனை வரும் சித்தியார் திருப்பாட்டான் உணர்க.

"உருமேனி தரித்துக் கொண்ட தென்றலும் உருவி றந்த
அருமேனி யதுவும் கண்டோம் அருவுரு வான போது
திருமேனி உபயம் பெற்றோம் செப்பிய மூன்றும் நந்தம்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே." (கக)

## மலமாசு கெடப்போக மறைமொழிந்து நீராடல்

ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந்
தீர்த்தன் நற்றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்
கூத்தன்இவ் வானுங் குவலயமும் எல்லோமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீ ராடேலோர் எம்பாவாய்.

(பொருள்) ஆர்த்த ... தீர்த்தன் - தொன்மையே கூட்டிய பிறவித்துன்பம் நீங்க உவகையால் ஆரவாரித்து முழுகும் தூய நீரையுடையவனும், நல் ... கூத்தன் - நல்ல தில்லைக்கண் உள்ள அறிவு வெளியில் அனலேந்தி ஆடும் அருட்கூத்துடையவனும், இவ்வானும் ... விளையாடி - இந்நிலவுலகத்தையும் வானுலகத்தையும் நம் எல்லோரையும் ஆக்கியும் காத்தும் ஒடுக்கியும் விளையாடுபவனும் ஆகிய சிவபெருமானுடைய, வார்த்தையும் ... செய்ய - பொருள்சேர் புகழைப் பாடிக்கொண்டு கைவளையல்கள் ஒலிக்கவும் நீண்ட மேகலை முதலிய அணிகள் ஒலிக்கவும், அணி குடைந்து - அழகிய கூந்தலின்மேல் வண்டுகள் எழுந்து முழங்கவும் மலர்கள் விளங்கும் திருக்குளத்தில் முழுகி, உடையான்...ஆடு - எல்லாம் உடைய இறைவனது பொன்போன்ற திருவடிகளைப் பாராட்டிப் பெரிய சுனைநீரிலும் முழுகுவோமாக.

(விளக்கம்) இஃது அயன் அரி அரன்மாட்டு வைத்து வழங்கு தொழில் மூன்றும் குறிக்கின்றது. இம்மூன்று தொழிலும் ஆவிகளின் உடலைப்பற்றி நிகழ்வன ஆகலின், அறியாது அவாவுற்று வேட்கும் இம் முத்தேவர்க்கும் அருளினன். 'அல்லலாந் தொழில் படைத்தே அடிக்கடி உருவெடுத்தே, மல்லல்மா ஞாலம் காக்க வருபவராய்ப்' பிறப்பர் இவர். தீர்த்தன் - திருத்த நீருடையான். மலம்நீங்கப் பிறவிக்கடல் மூழ்கலும், வினைமாசு போக அருள்நோக்கத் திருத்தநீர் ஆடலும் இதன் உள்ளுறையாகும். இஃது "அத்தாவுன் அடியேனை அன்பால் ஆர்த்தாய், அருள்நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக்கொண்டாய்" என்னும் அப்பர் தமிழ்மறையாலும் விளங்கும். இவ்விரண்டும் முறையே அகக்குற்றமும் புறக்குற்றமும் ஆகும். விளையாடி : பெயர். ஆடு - ஆடுக ; வியங்கோள், ஈறுதொக்கது. முழுகுவதன் முன்னும் பின்னும் முழுகும்போதும் திருமுறை பாடி முழுகுதல் வேண்டும்.

(௧௨)

## அம்மையப்பராய்த் திகழும் அணிநீர் ஆடுதல்

பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்
தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினல்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.

(பொருள்) பைங்குவளைக் ... போதால் - குளிர்ந்த கரிய குவளை மலராலும் அழகிய செந்தாமரை மலராலும், அங்கம்... அரவத்தால் - அழகிய நீர்வாழ் பறவைகளை யுடைமையாலும் பின்னி எழும் அலைகளை யுடைமையாலும், தங்கள்...சார்தலினல்- குளமாகிய தம்மிடத்து அழுக்கைப்போக்க விரும்புவார் வந்து அடைதலாலும், எங்கள்...மடுவில் - எங்கள் இறைவியையும் எம் இறைவனையும் ஒத்து விளங்கும் நீர்நிறைந்த பொய்கையில், புக...ஆர்ப்ப - பாய்ந்து பாய்ந்து புகுதலால் கன்னிப்பெண் காலணியாகிய சிலம்புகள் அவ்வொலியோடு கலந்து ஒலிக்கவும், கொங்கைகள்...ஆடு-மார்புகள் குலுங்கவும் முழுகும்நீர் மேலெழ வும் தாமரை மலர்களால் சிறந்து திகழும் பொய்கையில் குதித்து நீராடுவோமாக.

(விளக்கம்) இஃது அம்மை அப்பராக மருவுருவக் குறிப்பு வாய்ந்தது. அம்மைக்கு ஒப்பு: குவளைக் கார்மலரால் நீலநிறமும் அங்கம் குருகு இனம் என்பனவற்றுல் கைவளையல்களும் குறிப் பனவாகும். அங்கம் - கை. குருகு - வளையல். இனம் - பல. அடுக்கிய பல கைவளையல்கள். அப்பன் ஒப்பு: செங்கமலப் போதால் தீ வண்ணமும், பின்னும் அரவம் - பின்னிக்கிடக்கும் பாம்பால் உவந்துகொள்ளும் அணிவகைகளும் குறிப்பனவாகும். மலங்கழுவுவார் சார்தல் இருவர்க்கும் சேர்ந்த ஒப்பு. சிவதீக்கை முறையில் காண்டல், கருதல், தீண்டல், மறைகணித்தல் நான்கும் சிறந்தன. அக்குறிப்புக் கார்மலர், கமலம், குருகினம், அரவம் என்னும் பொருட் குறிப்பால் பெறப்படும். கார்மலர் கண்ணொப்பாதலால் காண்டலாகும். கமலம் நெஞ்சொப்பாத லால் கருதலாகும். அங்கம் குருகினம் - சிறகால் குஞ்சுகளைத் தழுவும் பறவையாதலால் தீண்டலாகும். அரவம் - ஓசையாத லால் அருமறையாகிய உபதேசத்தைக் குறிக்கும். 'ஓசைபெறும் அஞ்செழுத்'தென்பது சிவஞானபோதம். (கங)

## வளர்த்தெடுக்கும் அம்மையடி வாழ்த்தி நீராடுதல்

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்.

(பொருள்) காதார்...கலனாடக் - காதிலணிந்த தோடு அசைய மெய்யிலணிந்த மற்றைய அணிகளும் அசைய, கோதை...பாடி - தலையிற்சூடிய மாலை அசைய வண்டுக்கூட்டம் எழுந்து சுழலக் குளிர்ந்த நீரில் முழுகிப் பின் அறிவம்பலத்தைப் புகழ்ந்து பாடி, வேதப்...மாபாடி - மறைமுழங்கும் புகழ்பாடி மறைப்பொருளாம் இறைவனைப் பாடி, சோதி...தார்பாடி - பேரொளிப் பெருமானைப் பாடிச் சுற்றியணிந்த கொன்றை மலர்மாலையைப் பாடி, ஆதி... மாபாடி - எப்பொருளுக்கும் முதலும் முடிவுமாயுள்ள அவன் தன்மையைப் பாடி, பேதித்து ... ஆடு - வேறுபடுத்து நம்மை வளர்த்தெடுத்த வளையல் அணிந்த அருளம்மையின் திருவடி மாண்பைப் பாடி நீராடுவோமாக.

(விளக்கம்) இது பாங்கிரண்டில் ஒன்றாகிய மறைப்பாற்றல் குறிக்கின்றது. "பேதித்து நம்மை வளர்த்தெடுத்தல்" என்பது ஆணவமலப் பிணிப்பில் கட்டுண்டிருந்த ஆவிகளுக்கு உடல் கலன், உலகம் ஊண் முதலியவற்றை மாயையினின்றும் படைத்துக் கொடுத்தருளி வினைப்பயன் துய்க்குமாறு "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனை"க் காட்டாது பொய்யான உடம்பை மெய்யெனவும் நில்லாவுலகை நிற்கும் நிலம் எனவும் கருதச் செய்து இயைந்தியக்குவது. ஆமா - ஆமாறு. ஈறு தொக்கது. கொன்றைப்பூ புறத்தே ஐந்திதழும் நடுவே ஓங்கார வடிவான அகவிதழும் உள்ளது. இஃது ஓங்காரத்தை உள்ளடக்கிய திருஐந்தெழுத்தைக் குறிப்பதால் கார்நறுங்கொன்றை சிறந்ததாயிற்று. ஓங்காரத்தை உள்ளடக்கி யிருப்பதால் "சிவயநம" என்னும் திருவைந்தெழுத்திற்கு ஓங்காரம் சேர்க்கவேண்டுவதில்லை. இது, நெய்ச்சோற்றுக்கு நெய்வேண்டாமை போன்றதென்ப. பேதித்தல் - மறைத்தல். வளர்த்தெடுத்தல் - அருளல். திறம் - வழிபடுவோர் பக்குவத்திற்கு ஏற்பக்கொள்ளும் திருமேனி வகை. (கச)

## ஆட்கொள்ளும் வித்தகர்தாள் பாடி நீராடுதல்

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர
நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணி
பேரரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும் [யாள்
ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.

(பொருள்) ஓரொருகால்...வாயோவாள் - ஒவ்வொரு பொழுதில் எம்பெருமான் என்றென்றே பலமுறை சிவபெருமான் சீர்களை வாய் ஓவாயல் மொழிவாள், சித்தம்...பனிப்ப - உள்ளக் களிப்பு மிகக் கண்களில் இன்பக்கண்ணீர் விடாமல் பொழிய, பாரொருகால்...பணியாள் - நிலத்தே விழுந்து ஒருமுறையான வணக்கத்தை யுடையவள் மற்றைத் தேவரைக் குறித்து வணங்க மாட்டாள், பேரரையற்...ஆமாறும் - கடவுட் பெருவேந்தனாகிய சிவபெருமான் பொருட்டு ஒருவர் பெருமால் கொள்ளுதல் இவ்வாறே, ஆரொருவர்...வித்தகர் - இம்முறையில் இவளை ஆட்கொள்ளவல்ல வித்தகர் ஒருவர் ஆர் அவருடைய, தாள்...ஆடு - திருவடிகளை நாம் வாயாரப் பாடி அழகிய தோற்றமுள்ள பூக்கள் நிறைந்த நீரில் வீழ்ந்து ஆடுவோமாக.

(விளக்கம்) இது பாங்கிரண்டில் மற்றொன்றாகிய பேரருள் குறிக்கின்றது. இஃது ஆட்கொள்ளும் வித்தகர்தாள் என்னும் குறிப்பால் விளங்கும். 'சித்தங் களிகூர': கூர்தல் - மிகுதல். கூர: எச்சம் காரணப் பொருட்டு. ஒருகாலத்து ஓரிடத்து முப்பொறிகளும் ஒருங்கியைந்து இன்புறுந்தன்மை வருமாறு குறிக்கப் பெற்றது: 'வாயோவாள்' என்றதனால் மொழியும், 'சித்தங் களி கூர' என்றதனால் மனமும், 'வந்தனையாள்' என்றதனால் மெய்யும் பெறப்படும். இவ்வுண்மை இத் "திருவெம்பாவை" போன்று தனிமாண்புடைத்தாகிய திருத்தொண்டத் தொகைக்கண் "பத்தராய்ப் பணிவார்கள், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்" என்னும் திருவருள் மொழியால் செவ்விதின் விளங்கும். பேரரையன்: தீம்புனலுலகக் கடவுளாம் வேந்தன் - 'நீலமேனி வாலிழை பாகன்.' இவ்வுண்மை "மாயோன் மேய காடுறை யுலகமும், சேயோன்மேய மைவரை யுலகமும், வேந்தன் மேய தீம்புனல் உலகமும், வருணன்மேய பெருமணல் உலகமும்" எனத் தொல்காப்பியர் கூறியதால் விளங்கும். (கரு)

## அருள் ஒப்பாம் மழைபொழிய அப்போது பாடல்

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கும்
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்.

(பொருள்) முன்னிக்...திகழ்ந்து - மழையே நீ கடலைச்சார்ந்து அதன் குறைய நீரை முகந்து விண்ணிலெழுந்து எம்மை உடைய அருள் அம்மையைப்போல நீல நிறம்பெற்று விளங்கி, எம்மை... பொலிந்து - எம்மை ஆட்கொள்ளும் உடையாளின் சிற்றிடை போல் மின்னி விளக்கமுற்று, எம்பிராட்டி...சிலம்பி - எங்கள் தலைவியின் திருவடியிலுள்ள பொன்னம் சிலம்புபோல் ஒலித்து, திருப்புருவம்...குலவி - அவ்வுடையாளின் திருப்புருவம்போல வானவில் விளங்கச் செய்து, நந்தம்மை...அன்பர்க்கும் - நம்மை அடிமையாகவுடைய பெருமாட்டியினின்றும் பிரிதலில்லாத எம் பெருமானுடைய அன்பர்க்கும், முன்னி...மழை - அவ்வம்மை திருவுள்ளங்கொண்டு நமக்கும் சுரந்தருளும் இனிமைமிக்க அருட் பொழிவேபோன்று மழையே பொழிவாயாக.

(விளக்கம்) இஃது ஒப்பருளாம் செப்பம் குறிக்கின்றது. மார்கழி நீராடலின் பொதுப்பயன் நாடுசெழிக்க மழைவேண்டிப் பெறுதல். இது மழையே பொழிவாயாக என்பதனால் பெறப் படும். இன்னருளே - ஏகாரம் தேற்றம். எல்லாம் உடைய இறைவனின் வேறுபாடு இன்மையால் இறைவி உடையாள் எனப் பட்டாள். "உடையாள், எம்மையாளுடையாள், எம்பிராட்டி" என்னும் மும்மொழியும் முறையே உயிர்களின் கேவலநிலை, சகலநிலை, சுத்தநிலைகளைக் குறிப்பன. அவை: கேவலநிலை - புலம்புநிலை ஆவிகள் ஆணவத்துடன் ஏதும் அறிய இயலாது கிடக்கும் நிலை. அந்நிலையிலும் ஆவிகள் ஆண்டானுக்கு உடைமையே. அதனால் உடையாள் எனவும், சகலநிலை - புணர்வுநிலை அவ் ஆவிகளுக்குப் பேரருளால் உடல் கலன் உலகம் ஊண் முதலிய கொடுத்து நடத்தலால் 'எம்மையாளுடையாள்' என வும், சுத்தநிலை - புரிவுநிலை அவ் ஆவிகளுக்கு மெய்யுணர்வு நல்கிச் சிவத்தொடு கூட்டலால் 'எம்பிராட்டி' எனவும் முறையே மொழிந்தருளினர்.

(கசு)

## ஆரமுதைப் பாடி அணிநீராடுதல்

செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.

(**பொருள்**) **செங்கணவன்பால் ... பாலதாக** - திருமாலிடத்தும் நான்முகனிடத்தும் வானவர்கோன் முதலிய தேவர்களிடத்தும் மற்றெவ்விடத்துள்ளார்பாலும் இல்லாததாகிய ஒப்பற்ற பேரின்பம் நம்மிடத்ததாக, **கொங்குண் ... கோதாட்டி** - மணம் தங்கிய கூந்தலையுடைய பெண்ணே நம்மை வினைமாசு களைந்து, **இங்கு...எழுந்தருளி** - இந்நிலவுலகத்தில் நம் வீடுகள் தோறும் எழுந்தருளிவந்து, **செங்கமலப் ... சேவகனை** - செந்தாமரை மலரனைய அழகிய திருவடிகளைத் தந்தருளும் காவற் கடவுளை, **அங்கண்...அமுதை** - அழகிய அருள் நோக்க முடைய இறைவனை அடிமைகளாகிய நமக்குக் கிடைத்தற்கரிய அமுதாக உள்ளவனை, **நங்கள்...ஆடு** - நம்முடைய தலைவனைப்பாடி நன்மை சிறக்கத் தாமரை முதலியன நிறைந்து விளங்கும் நீரிற் குதித்து ஆடுவோமாக.

(**விளக்கம்**) இது பேரின்பம் குறிக்கின்றது. இஃது 'எங்கும் இலாத இன்பம்' என்பதனால் விளங்கும். கன்னியர் பலரும் ஒருத்தியை விளித்துக் கூறுகின்றனர். கோதாட்டுதல் - குற்றங் களைதல். செங்கணவன் ஆழிப்படையும், நான்முகன் தேரோட்டு நிலையும், தேவர்கள் அமுதமும் சிவபெருமானிடத்து வேண்டிப் பெற்றனர். இவையனைத்தும் சிற்றின்பமே. நமக்குத் தருவது பேரின்பம். வானுலக வாழ்வு ஏன் வேண்டினோம் இப்பயனில் வாழ்வெனப் பின்னிருந்து இரங்கும் தன்மைத்து. இஃது "இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும், அந்தரமே நிற்கச் சிவன் அவனி வந்தருளி" என்வும் "புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம் போக்குகின் றோம்அவமே" எனவும் வரும் அடிகள் அருள்மொழியால் நன்கு விளங்கும். அதனால் அவர்கள் நிலத்தில் பிறக்க விரும்புகின்றனர். முன்னிலைப்படாதாரையும் 'கொங்குண் கருங்குழலி' என்று முன்னிலைப் படுத்துவது. இது பின்னழகு. (கஎ)

## அண்ணாமலையான் அடிபாடி நீராடுதல்

அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணே இப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.

**(பொருள்)** அண்ணா...இறைஞ்சும் - *திருவண்ணாமலையில் அளவாவண்ணம் அழலாகி ஓங்கி எழுந்தருளியிருக்கும் இறைவனுடைய திருவடியைச் சார்ந்து வணங்கும்,* **விண்ணோர்...போல்** - *தேவர்கள் முடிமணிகள் பொலிவிழந்து ஒளி மழுங்கினாற்போல்,* **கண்ணார்...கரப்ப** - *இருள் நீங்க எங்கணும் பரவிய கதிரவன் ஒளி வெளிப்பட்டமையால்,* **தண்ணார்.....தாம்அகல** - *விண்மீன்கள் தம் மெல்லிய ஒளி மழுங்கி மறைய,* **பெண்ணாகி... மண்ணாகி** - *பெண்ணாகியும் ஆணாகியும் அலியாகியும் ஒளிவிளங்கும் வானாகியும் நிலமாகியும்,* **இத்தனையும் ... வேறாகி** - *இவ்வளவு பொருள்களிலும் வேறு பொருளாகியும்,* **கண்ணார்...பாடி** - *மெய்புணர்வுடையார்க்கு அமுதமாகியும் நிலைபெற்று நிற்கும் சிவபெருமான் திருவடிகளைப் பாடி,* **பெண்ணே ... ஆடு** - *பெண்ணே பொலிவு பெற்ற இந்நீர்நிலையில் குதித்து ஆடுவோமாக.*

**(விளக்கம்)** *இஃது ஒண்கழல் குறிக்கின்றது. இஃது 'அண்ணாமலையான் அடிக்கமலம்' என்றதனால் விளங்கும். பெண் ஆண் அலி விண் மண்ணாகி என்றதனால் ஒன்றாய், வேறாகி என்றதனால் வேறாய், அமுதமுமாய் என்றதனால் உடனாய் விளங்கும் சித்தாந்தப்புணர்ப்பு (அத்துவிதம்) குறிக்கப்பெற்றது. கதிரவன் ஒளிவர இருள் அகல்வதுபோல் சிவஞானம் தோன்ற மலவிருள் அகலும். கதிரொளியில் மீன்ஒளி அடங்குவதுபோல் இறை நிறைவில் ஆவி அழுந்தியறியும். இவை சித்தாந்த சைவக் குறிப்பாகும். இவ்வொப்பினால் சிவனருட் பேற்றிற்குரிய கடவுட் பத்தியைப் பலகாலம் மேற்கொண்டொழுகிய ஆவிகட்குத் 'தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த' என்றபடி, சிவபெருமான் குருவாய் எழுந்தருளி வந்து அருளச் சிவஞானம் தோன்றும்; தோன்றியதும் அவ்வுயிர்களுக்கு மலம் நீங்கும்; மலம் நீங்க உயிரறிவு இறையறிவில் அடங்கும்; ஆவிகள் இறைவன் திருவடி நிறைவில் கலந்து பேரின்புற்று வாழும். (கஅ)*

## அன்பர்பணி செய்ய எமை ஆளாக்கென வேண்டுதல்

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்று
அங்குஅப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்குஇப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோர் எம்பாவாய்.

(பொருள்) உங்கையிற்...பெருமான் எங்கள் பெருமானே உங்கையிற் சேர்ப்பிக்கப்பெறும் இப் பெண் உனக்கே அடைக்கலப்பொருளாவாள் என்று திருமணக்காலத்தில் பண்டைக் கால முதல் வழங்கிவரும் சொல்லைப் புதுப்பிக்கும் வாயிலாக எழுந்த எம் நடுக்கங்காரணமாக, உனக்கு...கேள் - உனக்கு ஒரு விண்ணப்பம் செய்வோம் கேட்டருள்வாயாக, எம்கொங்கை... சேரற்க - எங்களுடைய கொங்கைகள் நின் அன்பரல்லாதார் தோள்களைத் தழுவாதொழிக, எம் கை...செய்யற்க - எம்கைகள் நினக்கு அன்றி வேறு யார்க்கும் எத்தகைய தொண்டும் செய்யாதொழிக, கங்குல்...காணற்க எம்முடைய கண்கள் இரவும் பகலும் நின்னையன்றிப் பிறிது ஒரு பொருளையும் காணாதொழிக, இங்குஇப்..நல்குதியேல் - இவ்வுலகத்தில் இவ்வாறே எங்களுக்கு உயிர்த்தலைவனாகிய நீ அருள் செய்வாயாயின், எங்கெழில் என்...எமக்கு - கதிரவன் கீழ்த்திசையில் அல்லாமல் வேறு எத்திசையில் தோன்றினாலும் எமக்கு வரக்கடவது என்னை? (ஒன்றும் இன்று) என்பது.

(விளக்கம்) இஃது ஒன்பதாவது பெருகிய வேண்டுதல் குறிக்கின்றது. உடையாருக்கு - அறிவில்பொருள் உடைமையெனவும் அறிவுள்பொருள் அடிமை எனவும் பெயர்பெறும். உடைமைக்கு உரிமைக்காப்பும் அடிமைக்கு அடைக்கலக்காப்பும் உரிய. ஆவிகள் அனைத்தும் ஆண்டவன்பால் சேர்ப்பிக்கத்தக்க அடைக்கலப்பொருள். அதை நினைப்பூட்டுவதே பெண்ணின் பெற்றோர் திருமணக்காலத்தில் மருமகன்பால் மணப்பெண்ணை நின் அடைக்கலம் என்று புனல் வார்க்குங்கால் சொல்லுதல் அடைக்கலப்பொருளை விருந்தெனப் பெரிதும் ஓம்புதல் வேண்டும். மணமக்களிருவரும் ஆண்டவன் திருவடி வாழ்வு எய்துதற்குரியர். அதற்குச் செல்லும்வழி இல்வாழ்க்கை. அந்நெறிக்குத் துணை ஒருவருக்கொருவராவர். (௧௯)

## அருளின் ஐந்தொழில் ஆருயிர்க் காப்பே

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறும் இணையடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய்.

(பொருள்) (எங்கோனே) போற்றி...பாதமலர் - எம்மைப் பாதுகாத்து எப்பொருட்கும் முதலாகிய நின் திருவடிமலர்களை அருள்வாயாக, போற்றி...செந்தளிர்கள் - எம்மைக்காத்து எல்லாவற்றிற்கும் முடிவாகிய நின்செவ்விய திருவடிகளை அருள் வாயாக, போற்றி...பொற்பாதம் - எவ்வுயிரும் தோன்றுவதற்கு இடமான நின் திருவடிகள் எம்மைக் காத்தருள்க, போற்றி... கழல்கள் - எவ்வுயிர்க்கும் இம்மைமறுமை நுகர்வு அருளும் நின் திருவடிகள் எம்மைக் காக்க, போற்றி...இணையடிகள் - எல்லா வுயிர்களுக்கும் ஒடுக்கத்திற்கு ஏதுவாகிய நின் திருவடிகள் எம்மைக் காக்க, போற்றி...புண்டரிகம் - அரியும் அயனும் அறிய இயலாத திருவடிகள் எம்மைக் காக்க, போற்றி...பொன் மலர்கள் நாமெல்லாம் உய்யும்வண்ணம் அடிமைகொண்டு இன்பருளும் திருவடி எம்மைக் காக்க, போற்றி...ஆடு - யாம் நீராடுகின்ற அருளுருவாம் இம்மார்கழிநீர் எம்மைக் காக்க.

(விளக்கம்) இது பத்தாம் பேறாகிய காப்புக் குறிக்கின்றது. இதன்கண் அறுவகைக் காவல்கள் குறிக்கப்படுகின்றன. அது 'போற்றி' என்னும் இகர ஈற்று வியங்கோள் ஆற்றினும் பெறப் படும். முதலிரண்டு 'போற்றி'யும் வினை எச்சங்கள். அறுவகைக் காவல்: உணர்வு உடல் ஊண் மறை அன்பர் அடியார் என்ப. "படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும், உடையான் அரசருள் ஏறு" என்னும் பொதுமறையும் இதனை வலியுறுத்தும். ஐந்தொழிற்கும் உரியவன் சிவபெருமான். அவனே முழுமுதற் காவலன். இதன்கண் பெறப்படும் எட்டுப் போற்றியும் எட்டு நாண்மலர்கொண்டு பத்தியினால் வழிபட்டேத்துதற்கு வாய்ப் புடையன; ஆவிகள்பால் இறைவன் எண்குணங்களையும் பதிவிப்பன. (உ0)

திருச்சிற்றம்பலம்.

உ

## மாணிக்கவாசகர் அருளிய

# திருப்பள்ளி யெழுச்சி

திருச்சிற்றம்பலம்

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோஞ்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (௧)

அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழவெழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணாந்
திரள்நிரை யறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகட லேபள்ளி எழுந்தரு ளாயே. (௨)

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளியொளி உதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரும் அறிவரி யாய்எமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (௩)

இன்னிசை வீணையர் யாழினா ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (௪)

பூதங்கள் தோறும்நின் றாயெனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் என்நினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோமுனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்அரி யாய்எங்கள் முன்வந்(து)
ஏதங்கள் அறுத்தெம்மை ஆண்ட நள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (௫)

பப்பற வீட்டிருந் துணரும்நின் னடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றார்அணங் கின்மண வாளா
செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப் பறுத்தெமை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (௬)

அதுபழச் சுவையென அமுதென அறிதற்(கு)
அரிதென எளிதென அமரரும் அறியார்
இது அவன் திருவுரு இவனவன் எனவே
எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்

மதுவளர் பொழில்திரு வுத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னு
எதுவெமைப் பணிகொளும் ஆறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (எ)

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயும்நின் னடியார்
பழங்குடில் தொறுமெழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தணன் ஆவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே. (அ)

விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப்பொரு ளேயுன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாயுல குக்குயி ரானாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (கூ)

புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றோம்அவ மேஇந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் னலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே. (கO)

திருச்சிற்றம்பலம்

———

ஸ்ரீ ஆண்டாள் அருளிய

# திருப்பாவை

### உய்யக்கொண்டார் அருளிய ஆண்டாள் வணக்கம்

அன்ன வயற்புதுவை ஆண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

### பாவை நோன்பாவர் பாடி நீராட அழைத்தல்

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) நேரிழையீர் - அழகிய அணிகலங்களை யுடைய ர்களே, சீர் ... சிறுமீர்காள் - செல்வமிக்க திருஆய்ப்பாடியில் தாண்டசெய்யும் செல்வத்தையும் கன்னிப் பருவத்தையும் டையவர்களே, மார்கழித் ... நன்னாளால் - மாதங்களில் சிறந்த ர்கழித் திங்களில் முழுநிலாவாகிய நல்ல முழுத்த நாளிலே, .ர் ... குமரன் - கூர்மையான வேலையுடையவனும், பகைவர் ளுக்குக் கொடுமை செய்பவனும் ஆன, நந்தகோபனுக்குப ள்ளையாகப் பிறந்தவனும், ஏரார்ந்த ... சிங்கம் - அழகு நிறைந்த ண்களையுடைய யசோதைப் பிராட்டிக்கு இளஞ்சிங்கம் போன்ற னும், கார் ... முகத்தான் - காளமேகம் போன்ற திருமேனியையும், செந்தாமரை போன்ற கண்ணையும் ஞாயிறு திங்கள் போன்ற திருமுகத்தையும் உடைய, நாரா ... படிந்து - எல்லாம் வல்ல நாராயணனே நாம் விரும்பிய வரத்தை நமக்கே தந்தருள்வான்; லகோர் கொண்டாடுமாறு இக் நோன்பிலே ஈடுபட்டு, நீராட ... போதுமீனோ - நீராட விரும்புகின்றவர் வாருங்கள்.

(ஏல், ஓர் - அசைகள். எம்பாவாய்; எம் பா ஆய் - நமது நோன்பைப் பின் சென்று. திரு. சே. கி. அவர்கள் உரை.) (௧)

## நோன்பிற்குச் செய்வன நுவன்று மேற்கொள்ளுதல்

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரம னடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்
செய்யா தனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) வையத்து ... கேளீரோ - உலகத்தில் வாழ்கின்றவர்களே, (எம்பெருமானாலேயே பேறு என்றிருக்கும்) நாமும் நம்முடைய நோன்புக்கு மேற்கொள்ளவேண்டிய செயல்கள் (யாவை என்பதைக்) கேளுங்கள், பாற்கடலுள் ... பாடி - திருப்பாற்கடலுள் அறிதுயில்செய்கின்ற பரம்பொருளின் திருவடிகளை அன்புடன்பாடி, நெய் ... நீராடி - நெய்யும் பாலும் உண்ணாதவர்களாய் விடியற்காலையில் நீராடி, மையிட்டு ... முடியோம் - கண்ணுக்கு மைதீட்டாதவர்களாய்த் தலைக்குப் பூச்சூடாதவர்களாய், செய்யாதன ... ஓதோம் - பெரியோர் செய்யாதவற்றைச் செய்யாதவர்களாய்த் தீமை பயக்கும் (கொடிய) கோட்சொற்களை (எம்பெருமானிடம் சென்று) சொல்லாதவர்களாய், ஐயமும் ... உகந்து - அறிவோர்க்கு நல்ல செயல்பொருட்டு அளிக்கும் உயர் பொருள்களையும் பிரம்மசாரிகள் துறவிகள் ஆகிய எளியவர்க்குப் பிச்சையையும் நம்மால் இயன்ற அளவு ஈந்து நாம் உய்யும் வகையை நாடி மகிழ்வோமாக. (உ)

## உத்தமன்பேர் பாட ஓங்கும் பெருஞ்செல்வம்

ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்குபெருஞ் செந்நெ லூடு கயலுகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) ஓங்கி ... பாடி - வானுற வளர்ந்து திருவடியால் மூவுலகையும் தாவி அளந்துகொண்ட புருடோத்தமனுடைய திருப்பெயர்களைப் பாடி, நாங்கள் ... நீராடினால் - நாங்கள் நம் முடைய நோன்புக்கு ஒருப்பட்டு முழுகினால், தீங்கின்றி ... பெய்து - நாடெல்லாம் தீங்குகள் இல்லாமல் மாதந்தோறும் மும்முறை மழைபெய்து, ஓங்கு ... உகள - ஓங்கி வளர்ந்த செந்நெற்பயிர்களின் நடுவே கெண்டைமீன்கள் துள்ளவும், பூங்குவளை ... படுப்ப - அழகுமிக்க நெய்தல்மலரில் புள்ளிக ளுடைய வண்டுகள் கண்வளரவும், தேங்கா ... பசுக்கள் - தொழுவத்திற் புகுந்து பால்கறப்போர் பருத்த மடிகளைப் பற்றிச் சுறக்கக் கறக்கக் குடம் நிறையப் பால்தரும் சிறுபிள்ளை கள் கட்டவும் தொடவும் இணங்கும் பெரிய பசுக்களும், நீங்காத ... நிறைந்து - அழியாத செல்வமும் நிறைவதாகும். (௩)

மாலைப்புக் காட்டி மழைபெய்ய வாழ்த்தியது

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
　　ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கறுத்துப்
　　பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
　　தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
　　மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) ஆழி...கரவேல் - மழைபெய்தற்குத் தலைமையான மழைத்தெய்வமே! நீ உன்னுடைய மழையாகிய கொடையில் சிறிதும் ஒளித்தல்கூடாது, ஆழியுள் ... ஏறி - நீ கடலிற் புகுந்து நீரைமொண்டுகொண்டு இடிமுழங்கி வானம் ஏறிப்பரவி, ஊழி ... கறுத்து - எல்லாப் பொருள்களுக்கும் காரணனான திருமாலின் திருமேனிபோல் கருமைநிறம் பெற்று, பாழி...மின்னி - பெருமை யும் அழகும் வாய்ந்த திருத்தோள்களையும் உந்தித்தாமரையையும் உடைய முழுமுதல்வன் வலத்திருக்கையில் பொருந்தியுள்ள திருவாழி ஆழ்வானைப்போல ஒளிவிட்டுக்கொண்டு, வலம்புரி ... அதிர்ந்து - இடத்திருக்கையில் விளங்குகின்ற பாஞ்சசன்னியாழ்வா னைப்போல நிலைநின்று ஒலித்து, சார்ங்கம் ... சரமழைபோல் - சார்ங்கவில்லால் தள்ளப்பட்ட பாணமழைபோல், வாழ உலகி னில் - உலகோர் யாவரும் வாழும்படியும், நாங்களும் ... நீராட - நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராட்டம் செய்ய, தாழாதே பெய்திடாய் - தாமதியாமல் மழைபொழியக்கடவாய். (௪)

## யசோதை வயிற்றுதித்த எம்பெருமானை வாழ்த்தியது

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் மணிவிளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.

(பொருள்) மாயனை ... துறைவனை - வியத்தகு செய்கையுடையவனை இறையின்தொடர்பு நிலைபெற்ற வடமதுரையில் தோன்றியவனை தூய ஆழமான நீரையுடைய யமுனை ஆற்றங்கரையில் விளங்குபவனை, ஆயர் ... தாமோதரனை - இடைக்குலத்திலே விளங்குகின்ற மங்கல விளக்குப்போன்றவனை யசோதைப் பிராட்டியின் வயிற்றை விளங்கச்செய்யக் கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டவனுமான கண்ணபிரானை, தூயோமாய் ... தொழுது - நாம் அகம்புறம் தூய்மையுடையவராய் வந்து நறுமலர்களைத் தூவித் தொழுது, வாயினால் ... சிந்திக்க - வாயாரப் புகழ்ந்துபாடி மனத்தால் இடையறாது எண்ண, போய ... செப்பு - உண்மை ஞானம் உண்டாதற்கு முன்புண்டான பிழைகளும், பின்பு அறியாமையால் வருகின்ற பாவங்களும் நெருப்பிலிட்ட பஞ்சுபோல் உருமாய்ந்து அழிந்து போகும்; (ஆகையால் கண்ணனாக அவதரித்துத் தேவர் துயர்துடைத்த எம்பெருமானுடைய திருநாமங்களை) ஓதுவாயாக. (௫)

## அரியென்னும் பேரரவம் அன்புடன் கேட்டெழுதல்

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) புள்ளும்... கோயிலில் - இரை தேடும் பறவைகளும் ஒலித்துக்கொண்டிருக்கின்றன; பறவைகளுக்குத் தலைவனாகிய பெரிய திருவடியை நடத்தும் முழுமுதல்வன் திருக்கோயிலில், வெள்ளை ... கேட்டிலையோ - வெண்மை நிறமுடைய, யாவரையும் அழைக்குந் தன்மை வாய்ந்த சங்கின் பேரோசை கேட்கவில்லையா? பிள்ளாய் ... காலோச்சி - ஆண்டவன்பால் அன்புசெய்து இன்புறும் தன்மையறியாத பெண்ணே! எழுந்திருப்பாயாக; பூதனையின் கொங்கையில் தடவிய நஞ்சோடு அவளுயிரையும் உண்டு வஞ்சனை பொருந்திய சகடமானது கட்டுக்குலையும்படி திருவடிகளாலே முறித்து, வெள்ளத்...யோகிகளும்- திருப்பாற் கடலிலே அரவணையில் கண்வளர்ந்தருளும் உலக முதல்வனை முனிவர்களும் மூச்சுப்பயிற்சிசெய் தவத்தோரும் தங்கள் உள்ளத்தில் அமைத்துக்கொண்டு, மெள்ள ... குளிர்ந்து - அசையாது எழுந்து 'அரியே அரியே' என்று முழங்கும் பேரொலி எங்கள் மனம் புகுந்து குளிர்ந்தது. (சு)

## நீயே வந்து திறவெனக் கூறுதல்

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தன்கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ! பேய்ப்பெண்ணே!
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ
நாயகப் பெண்பிள்ளாய்! நாராய ணன்மூர்த்தி
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ
தேச முடையாய்! திறவேலோ ரெம்பாவாய்.

(பொருள்) கீசு ... பெண்ணே - அறிவற்ற பெண்ணே, வலியன் பறவைகள் கூடிக் கீச்சுக் கீச்சென்று பேசின பேச்சொலி கேட்கவில்லையோ? வாச ... ஆய்ச்சியர் - மணங்கமழ்கின்ற அழகிய மயிர்முடியையுடைய இடைச்சியர், காசும் ...கைபேர்த்து - அச்சுத்தாலியும் முளைத்தாலியும் ஆமைத் தாலியும் கலகலவென்று ஒலிக்கும்படியாகக் கையை எடுத்து, மத்தினால் ... கேட்டிலையோ- மத்தாலே கடைந்து ஓசைப்படுத்திய தயிர் கடைகிற ஓசையும் கேட்கவில்லையோ? நாயகப்...பாடவும்-பெண்களுக்குத் தலைமையானவளே, நாராயணனுடைய அவதாரமான கண்ணபிரானை நாங்கள் பாட, நீ...திற-கேட்டிருந்தும் கிடந்து உறங்குகிறாயோ? பத்தியொளி வாய்ந்தவளே! நீ வந்து திறப்பாயாக. (எ)

## வழிபட்டார்க்கு வேண்டுவதருளுவான் மாயன்

கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான் போகின்றாரைப் போகாமல் காத்து உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம் கோது குலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆவாவென் றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.

(பொருள்) கோதுகலமுடைய ... பாவாய் - கண்ணனால் விரும்பப்பட்ட அழகிய பதுமைபோன்றவளே! கீழ்வானம் ... காண் - கீழ்த்திசையில் ஆகாயமானது வெளுத்து எருமைகள் வைகறையில் விடப்பட்டுப் பனிப்புல் மேய்கைக்காக வயல்களில் சென்று புகுந்தன; மிக்குள்ள ... நின்றோம் - உன்னை யொழிந்தாரெல்லாரும் போகையே பயனாகக்கொண்டு போகிற எல்லாப் பெண்களையும் போகவிடாமல் தடுத்து உன்னை அழைப்பதற்காக உன்வாசலிலே வந்து நிற்கின்றோம்; எழுந்திராய் - எங்களோடு கலந்துகொள்ள எழுந்திருப்பாயாக. பாடிப் பறைகொண்டு - கண்ணனுடைய குணங்களைப் பாடி அவனிடம் பறையைப் பெற்று, மா வாய் ...சேவித்தால் - குதிரை வடிவோடு வந்த கேசி யென்னும் அசுரனுடைய வாயை இருபிளவாகக் கிழித்துப் போகட்டவனும் சாணூர முட்டிகரென்னும் மல்லர்களை மாளச் செய்தவனும் உள்ள தேவதேவனை நாம் அணுகி அடிபணிந்தால், ஆவா ... அருளும் - ஐயோ என்று இரங்கி நம்முடைய குறைகளை விசாரித்துக் கருணை புரிவான். (அ)

## மாமீர் உம்மகளை எழுப்பீரோ் என்பது

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய
தூபங் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்
மாமீர்! அவளை யெழுப்பீரோ் உன்மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்.

(பொருள்) தூமணி ... கண்வளரும் - குற்றமற்ற மணிகள் அழுத்திக் கட்டப்பட்ட மாளிகையில் நாற்புறத்தும் விளக்குகள் எரியவும், நறுமணப்புகை எங்கும் மணக்கவும், அன்னத்தூவியாற் செய்த மென்மையான படுக்கையின்மேல் கண்ணுறங்குகிற; மாமான் ... திறவாய் - அம்மான் பெண்ணே, மாணிக்கக் கதவினுடைய தாழ்ப்பாளைத் திறப்பாயாக. மாமீர் ... அனந்தலோ - மாமியரே, உள்ளே உறங்குகிற உம்மகளை எழுப்பமாட்டீரோ? உம்முடைய மகள்தான் வாய்ப்புலன் இல்லாதவளோ, செவிப்புலன் அற்றவளோ பேருறக்கம் உடையவளோ? ஏமப் ... பட்டாளோ - எழுந்திராவண்ணம் காவலிடப்பட்டாளோ, நெடும்போது உறங்கும்படி மந்திரத்தால் கட்டப்பட்டாளோ? மாமாயன்...நவின்று - அளவிட்டுச் சொல்லக்கூடாத வியத்தகு குணங்களையும் செயல்களையும் உடையவனே, திருமகள் கேள்வனே, ஸ்ரீவைகுண்ட நாதனே என்று இவ்வாறாக எம்பெருமானுடைய ஆயிரக்கணக்கான திருநாமங்களையும் வாயாரச் சொல்லினோம் (இனியேனும் உன் மகளை எழுப்பலாகாதோ என்றனர்). (௯)

## தெளிந்து வந்து கதவைத்திற என்பது

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ? வாசல் திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்த லுடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.

(பொருள்) நோற்று ... திறவாதார் அழகிதாக நோற்று இன்ப நுகர்ச்சியை இடைவிடாது நுகர்கின்ற அம்மே வாசற் கதவைத் திறவாதவர்கள் ஒரு வாய்ச்சொல்லும் சொல்லமாட்டாரோ? பண்டொருநாள் ... தந்தானோ - முற்காலத்திலே கூற்றத்தின் வாயில் வீழ்ந்து இறந்த கும்பகருணனும் உனக்குத் தோற்றுப்போய்ப் பேருறக்கத்தைத் தானோ தந்தானோ? நாற்றத் ... புண்ணியனால் - மணம் கமழ்கின்ற திருத்துழாய் அணிந்த திருமுடியை உடையவனும், எவ்வுயிரையும் காப்பவனுமான நாராயணன் அன்புடையவர்களாகிய நம்மாலே மங்களாசாசனம் பண்ணப்பட்டு நமக்கு வேண்டும் நோன்பாகிய பயனைத் தருபவனாய் நிலைநின்ற அறவாழி அந்தணன் ஆதலால், ஆற்ற ... திற - பெருந் தூக்கத்தை யுடையவளே! எங்களுக்கு அணிபோன்றவளே! தடுமாற்றமின்றித் தெளிந்துவந்து கதவைத் திறப்பாயாக. (௧0)

## அசையாது பேசாது உறங்குவது எற்றுக்கு

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!
புற்றர வல்குல் புனமயிலே! போதராய்
சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட
சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டி! நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்.

(பொருள்) **கற்றுக் ... செய்யும்** - கன்றுகளை ஈன்ற (என்றும் கடமையாகவே இருக்கும்) பசுக்களினுடைய பல குழுக்களை (முலைக்கடுப்புத் தீரும்படி) கறப்பவர்களாய்ப் பகைவர்களுடைய வலிமைகெட வலிந்துசென்று போர் செய்யுமவர்களாய், **குற்ற மொன்று ... போதராய்** - ஒருவகைக் குற்றமும் இல்லாதவர்களாய் உள்ள பசுமேய்க்கும் இடையர்குடியில் பிறந்த பொன்கொடிபோல் அழகிய வடிவுடையவளே! புற்றிலிருக்கிற பாம்பின் படத்தை யொத்த பிட்டியினையும் காட்டில் விரும்பியவாறு திரியும் மயில் போலும் சாயலையும் உடையவளே! எழுந்து வருவாயாக; **சுற்றத் ... பாட** - உன்னுடைய எல்லா உறவினர்களும் தோழியர்களும் திரண்டு வந்து உன் திருமாளிகை முற்றத்திலே புகுந்து கார்மேக வண்ணனான கண்ணனுடைய திருநாமங்களைப் பாடிக்கொண்டிருந்தும், **நீ சிற்றாதே ... பொருள்** - செல்வம் வாய்ந்த நீ அசையாமலும் பேசாமலும் உறங்கும் செய்கை எப் பயனைக் கருதியோ? (அறியோம்.) (கக)

## ஊரறிந்தபிற்பு உறங்காதே என்றது

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்
இனித்தா னெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்!
அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) கனைத்து ... சோர-இளங்கன்றுகளையுடைய எருமைகள் பால் கறப்பாரில்லாமையின் கதறிக்கொண்டு தம் கன்றின் மீது இரக்கமுற்று அவற்றை நினைத்து அந்நினைவினால் மடிக் காம்பின் வழியே பால் இடைவிடாது சொரிய, நனைத்து ... பற்றி - அதனால் வீட்டைமுற்றும் ஈரமாக்கிச் சேறாகப்பண்ணும் பெருஞ் செல்வத்தையுடையவன் தங்கையே பனி எங்கள் தலையிலே விழுமாறு உன் மாளிகை வாசற்காலின் தண்டியத்தைப் பற்றிக் கொண்டு, சினத் ... பாடவும் - பிராட்டியைப் பிரித்தான் என்னும் சினத்தினால் இலங்கை வேந்தன் இராவணனைக் கொன்ற மனத்துக்கு இனியவனைப் பாடிக்கொண்டிருந்தும், நீ ... அறிந்து - நீ வாய்திறந்து பேசுகின்றிலை; ஊரிலுள்ளார் எல்லாரும் துயிலுணர்ந்த பின்பும் ஈதென்ன பெருந்தூக்கம்; எங்கள் ஆற்றாமையை அறிந்த நீ இனியேனும் எழுந்திருப்பாயாக. (கஉ)

## கள்ளந் தவிர்ந்து கலந்தின்புற வேண்டல்

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்
பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்றுப்
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) புள்ளின் ... போய் - பறவை உருக்கொண்டு வந்த பகாசூரனுடைய வாயைக் கிழித்தவனும், கொடிய இராவணனுடைய பத்துத் தலைகளையும் கிள்ளி எறிந்தவனுமாகிய சக்கரவர்த்தித் திருமகனுடைய வீர வரலாற்றைப் பாடிச்சென்று, பிள்ளைகள் ... உறங்கிற்று - எல்லாப் பெண்பிள்ளைகளும், கண்ணனும் தாங்களும் (நோன்பு நோற்பதற்காகக்) கூடுகைக்குக் குறித்த இடத்தில் புகுந்தார்கள்; வெள்ளி உச்சிக்கு வந்து வியாழன் மறைந்தது, புள்ளும் ... நீராடாதே - பறவை இரை தேடுதற்காக ஒலித்துக்கொண்டு சென்றன; பூவையும் மானையும் போன்ற கண்ணழகு வாய்ந்தவளே! உடம்பு முழுதும் குளிரும்படி குளத்திற்படிந்து முழுகாதே; பள்ளிக் ... கலந்து - படுக்கையிற் கிடந்து உறங்குகின்றாயோ, பதுமை போன்றவளே! கண்ணனும் நாமும் கூடுகைக்கு வாய்த்த இந்த நல்லநாளிலே நீ கண்ணன் பண்பையும் செயல்களையும் தனியே நினைத்து வருந்துவனையைவிட்டு எங்களுடன் கலந்து இன்புறுவாயாக. (கங)

## சொல்லும் செயலும் ஒவ்வாதாளை எழுப்புதல்

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணனைப் பாடேலோ ரெம்பாவாய்.

(பொருள்) உங்கள் ... காண் - உங்கள் புழைக்கடைத் தோட்டத்திலுள்ள தடாகத்துள் செங்கழுநீர் மலர்ந்து கருநெய்தல் குவிந்தன அஃதன்றியும், செங்கற் ... போகின்றார் - காவிப்பொடியில் தோய்த்த ஆடைகளையும் வெளுத்த பற்களையும் உடைய தவக்கோலத்தவர் தங்களுடைய திருக்கோயில்களைத் திறத்தற் பொருட்டுப் போகின்றனர், எங்களை ... நங்காய் - யாவருக்கும் முந்திவந்து எங்களை எழுப்புவதாக வாய்ச்சொற் சொல்லிச் செய்யாதொழிந்த நங்கையே, நாணாதாய் ... பாட - சொல்லியபடி செய்யவில்லையே என்னும் நாணமும் இல்லாதவளே பேச்சில் இனிமையுடையவளே ஸ்ரீபாஞ்ச சந்யத்தையும் திருவாழியாழ்வானையும் தாங்கிய நீண்ட திருக்கைகளையுடையவனும் செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவனுமான கண்ணபிரானைப்பாட, எழுந்திராய் - எழுந்திருப்பாயாக.

(ஆம்பல் - அல்லி. கூம்பின - குவிந்தன. செங்கற்பொடி - காவிப்பொடி. கூறை - ஆடை. நா - ஈண்டுச்சொல். இடவாகுபெயர்.) (கச)

## மாயனைப் பாட வருக என்றல்

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ!
சில்லென் றழையேன்மின்! நங்கைமீர்! போதர்கின்றேன்
வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை
எல்லாரும் போந்தாரோ? போந்தார்போந் தெண்ணிக்கொள்
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்.

(பொருள்) எல்லே ... உறங்குதியோ-(உணர்த்துமவர்) இளங்கிளி போன்ற சொற்களையுடையவளே நாங்கள் வந்தபின்பும் தூங்குகிறாயோ? சில்லென் ... போதர்கின்றேன் - (உறங்குமவள்) பருவம் வாய்ந்தவர்களே சிலுகுசிலுகு என்று அழையாதேயுங்கள்; புறப்பட்டு வருகின்றேன், வல்லை ... வாயறிதும் - (உணர்த்துமவர்) பேச்சுவன்மையுள்ள உன் உறுதிமொழியையும் பேச்சு வல்லமையையும் முன்னமே அறிவோம், வல்லீர்கள் ... ஆயிடுக - (உறங்குமவள்) நீங்களே பேச்சுத்திறமை உடையவர்கள்; நீங்கள் சொல்லிறபடி நான்தானே வல்லவளாக ஆகக்கடவேன்; ஒல்லை...வேறுடையை - (உணர்த்துமவர்) நீ விரைவில் வந்து சேரவேண்டும்; வேறு என்ன பயனை உடைத்தாயிருக்கிறாய்; எல்லாரும் போந்தாரோ - (உறங்குபவள்) எல்லாப் பெண்களும் வந்தார்களோ; போந்து ... கோள் - (உணர்த்துபவள்) வந்திருக்கிறார்கள்; புறப்பட்டு வந்து எண்ணிக்கொள். வல்லானை ... பாட - வலிமையுடைய குவலயா பீடத்தைக் கொன்றானை பகைவர்களான கஞ்சன் முதலியோருடைய மதிப்பைக் கெடுத்தவனை மாயையில் அகப்படுமவனைப் பாடுகைக்காக (என்கிறார்கள்.) (கரு)

## கோயில் வாயிலானைத் திறக்கக் கோருவது

நாயக னாய்நின்ற நந்தகோ பனுடைய
கோயில் காப்பானே! கொடித்தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னம்முன்னம் மாற்றாதே அம்மா! நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

(பொருள்) நாயகனாய் ...... திறவாய் - தலைவனாய் இருக்கிற ஸ்ரீ நந்தகோபருடைய திருமாளிகையைக் காக்குமவனே! துகில் கொடிகள் விளங்குவதும் தோரணங்கள் கட்டியிருப்பதுமான திருவாயிலைக் காக்குமவனே! அழகிய கதவின் தாழ்ப்பாளைத் திறக்கவேண்டும்; ஆயர் ... நேர்ந்தான் - இடையர் பெண்களான எங்களுக்கு நீலமணி நிறத்தையுடைய கண்ணபிரான் ஒலிக்கின்ற பறையைத் தருகிறேனென்று நேற்றே திருவாக்களித்துள்ளான். (ஆதலால்), தூயோமாய் ...... பாடுவான் - திருப்பள்ளி எழுச்சி பாடுகைக்குத் தூய்மை யுடையவர்களாய் வந்திருக்கிறோம், வாயால் ... நீக்கு - முதன் முதலிலே உம்வாயாலே மறுக்காதே; அன்றியும் சேர்ந்திருக்கிற வாசற்படியையுடைய கதவை நீரே திறக்கவும். (கசு)

## யசோதை கண்ணன் பலதேவரை எழுப்புதல்

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்!
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெரு மாட்டி! யசோதாய் அறிவுறாய்
அம்பர மூடறுத் தோங்கி உலகளந்த
உம்பர்கோ மானே! உறங்காது எழுந்திராய்
செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்.

(பொருள்) அம்பரமே ... எழுந்திராய் - (முதற் கட்டில்) ஆடைகள் குளிர்ந்த தீர்த்தம் அடிசில் ஆகிய இவற்றைத் தானஞ் செய்பவரும் எங்களுக்குக் கடவுளானவருமான ஸ்ரீ நந்தகோபரே எழுந்திருக்க வேண்டும், கொம்பனார் ... அறிவுறாய் - (இரண்டாம் கட்டில்) வஞ்சிக்கொடியை ஒத்த பெண்களுக்கெல்லாம் முதன்மையானவளாய் இக்குலத்துக்கு மங்கள தீபம் போன்றவளாய் எங்களுக்குத் தலைவியாய் உள்ள யசோதைப் பிராட்டியே எழுந்திருக்கவேண்டும், அம்பரம் ... எழுந்திராய் - (மூன்றாம் கட்டில்) வானத்தையெல்லாம் இடைவெளி யாக்கிக்கொண்டு, பரமபதத்தளவும் செல்ல வளர்ந்து அனைத்துலகங்களையும் அளந்தருளுகையாலே தேவர்களுக்குத் தலைவனானவனே கண்வளர்ந்தருளாமல் எழுந்திருக்க வேண்டும், செம்பொற் ... உறங்கேல் - (நான்காம் கட்டில்) சிவந்த பொன்னாற்செய்த வீரக்கழலையுடைய திருவடிகளையுடைய ஸ்ரீமானான பலபத்திரனே உனக்குத் தம்பியான கண்ணனும் அவன் சொல்வழியே நடக்கும் நீயும் உறங்காதெழுந்திருக்கவேண்டும் (என்கிறார்கள்). (௧௭)

## பின்னாய் அலர்பாடப் பெருங்கதவம் திற என்றல்

உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோ பாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலிஉன் மைத்துனன் பேர்பாட
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) உந்து ... மருமகளே - மதநீர் பெருகாநின்ற யானை போன்ற, பகைவரைக்கண்டு பின்வாங்காத தோள்வலியையுடைய ஸ்ரீ நந்தகோபருடைய மருமகளே! நப்பின்னாய் ... திறவாய் - நறுமணம் கமழாநின்ற கூந்தலையுடைய நப்பின்னைப் பிராட்டியே கதவைத் திறவாய்; வந்தெங்கும் ... காண் - கோழிகளானவை எத்புறத்திலும் வந்து சூழ்ந்து கூவாநின்றன; குருக்கத்திக் கொடிப் பந்தல்மேல் தங்குகிற குயில்கள் கூட்டங்கூட்டமாகக் கூவாநின்றன, பந்தார் ... மகிழ்ந்து - பந்து பொருந்திய விரல்களை யுடையவளே! உன் கணவன் கண்ணபிரானுடைய திருநாமங்களை நாங்கள் பாடுமாறு அவனும் நீயும் மைத்துனமையாடி ஒருவர்க்கொருவர் இட்டீடு கொள்ளும்போது அவனுடைய பேர்களைப் பழித்துப் பாடும்படிக்கீடாக அழகுமிக்க வளைகள் ஒலிக்கும்படி நடந்துவந்து சிவந்த தாமரை மலர்போன்ற கையாலே கதவைத் திறப்பாயாக (கஅ)

## நப்பின்னாய் எழுப்பிபிட நாடுக என்றது

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினாய்! நீ உன் மணாளனை
எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய்.

(பொருள்) குத்து ... ஏறி - நிலை விளக்குகள் நாற்புறமும் எரியாநிற்க யானைத் தந்தங்களால் செய்த கால்களையுடைய கட்டிலிலே மென்மைத் தன்மையையும் (அழகு, குளிர்த்தி, மார்த்தவம், பரிமளம், வெண்மை என்னும்) ஐந்து குணங்களையும் உடைத்தான திருப்பள்ளியில் ஏறியிருந்து, கொத்தலர் ... திறவாய் - கொத்துக்கொத்தாக அலராநின்றுள்ள மலர்களணிந்த திருக்குழலை உடைய நப்பின்னைப் பிராட்டியின் கொங்கைகளைத் தன்மேலே வைத்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற அகன்ற திருமார்பை யுடையவனே வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்ல வேண்டும், மைத்தடங் ... தகவன்று - அஞ்சனமிட்டு அழகுசெய்யப்பட்ட அகன்ற கண்களையுடையவளும், நொடிப்பொழுதும் அவனைப்பிரிந்து ஆற்றாதவளுமான நப்பின்னைப் பிராட்டியே! நீ உன்னுடைய மணவாளனை கண்ணனை ஒரு கண்ணிமைப் பொழுதும் தூக்கத்தைவிட்டு எழுந்திருக்கவிடுகிறாயில்லை; இது உன் இயற்கைக்கும் குணத்துக்கும் ஒவ்வாது (என்கிறார்கள்).(ககூ)

### கண்ணனையும் எங்களையும் கனிந்தாட்டுக என்றல்

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்
செப்ப முடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்
செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்துஉன் மணாளனை
இப்போதே எம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய்.

(பொருள்) **முப்பத்து ... துயிலெழாய்** - முப்பத்து மூன்று வகையான தேவர்களுக்குத் துன்பம் வருவதற்கு முன்னமே அவர்கள் நினைத்த இடத்திற்குச் சென்று அவர்கள் நடுக்கத்தைப் போக்கத்தக்க மிடுக்குடைய கண்ணபிரானே திருப்பள்ளி யுணர்ந்து வரவேண்டும், **செப்பம் ... துயிலெழாய்** - அன்பரைக் காக்குமவனாய் அவர்கள் பகைவர்களை அடக்கும் வல்லமை யுடையவனாய் பகைவர்களுக்குத் துன்பத்தையே கொடுக்கவல்ல வனாய் உள்ள தூயோனே துயிலொழிந்து வரவேண்டும், **செப் பன்ன ... துயிலெழாய்** - பொற்கலசத்தையொத்த மிக மென்மை யான கொங்கைகளையும் பவளம் போன்ற சிவந்த வாயையும் நுண்ணிய இடையையும் உடைய பெண்மைக்குணங்கள் நிறைந்த நப்பின்னைப் பிராட்டியே பெரிய பிராட்டியாரை யொத்தவளே துயிலொழிந்து வந்து, **உக்கமும் ... நீராட்டு** - ஆலவட்டத்தையும் கண்ணாடியையும் உன்னுடைய மணவாளனான கண்ணனையும் எங்கட்கு உதவி வேட்கையால் மெலிந்த உடம்புடையரான எங்களையும் இப்போதே நீராட்டக்கடவாய். (உ0)

### ஒளியுருவே திருப்பள்ளி யுணரவேணும் என்றல்

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்
ஊற்ற முடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்
மாற்றார் உனக்கு வலிதொலைந்துஉன் வாசற்கண்
ஆற்றாது வந்துஉன் னடிபணியு மாபோலே
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) ஏற்ற ... பசுக்கள் - சுரந்தபாலை ஏற்ற கலங்கள் எதிரே பொங்கி மேலே வழியும்படியாக இடைவிடாமல் பாலைச் சுரப்பனவும் பெண்களும் பேதைகளும் அணைத்துக்கொள்ளு மாறு சாந்தமும் உதாரகுணமும் வாய்ந்தனவும் ஸ்ரீசத்துருஞ்சய லைப்போலப் பருத்திருப்பனவுமாகிய பசுக்களை, ஆற்ற...அறிவுறாய்- மிகவும் எண்ணிக்கையின்றிப் பெற்றுள்ளவரான நந்தகோப குடைய பிள்ளையானவனே திருப்பள்ளி யுணரவேண்டும், ஊற்ற ... துயிலெழாய் - மிக்க திண்மையுடையனாய் வேதத்தா லும் அறியப்படாமையாகிற பெருமையுடையனாய் ஞானத்திலே விளங்கும்படி நிற்கிற ஒளியுருவமானவனே திருப்பள்ளி யுணர வேண்டும், மாற்றார் ... ஆற்றாது - பகைவர் உன்னுடைய வலிமை யைக்கண்டு தங்கள் வலிமாண்டுபோய் உன் வாசலிலே கதியற்று வந்து பொறுக்கமாட்டாமல், வந்துன் ..புகழ்ந்து - உன் திருவடி களிலே விழுமாறுபோலே உன்னைத் துதித்து யாம் மங்கள சாசனம் பண்ணிக்கொண்டுவந்து இங்குச் சேர்ந்தோம். (உக)

திருக்கடைக்கண் நோக்கம் சாதிக்க வேண்டல்

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்
அங்க ணிரண்டும்கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல்
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) அங்கண்மா ... கீழே - அழகியதாய் விரிந்ததாய் உள்ள பூமியை ஆண்ட மன்னர்கள் நமக்கு மேம்பட்டாரில்லை என்னும் செருக்கொழிந்து தேவரீருடைய அரியாசனத்தின் கீழே, சங்கம்...தலைப்பெய்தோம் - கூட்டங் கூட்டமாய்ச் சேர்ந்து ஓலக்கமாக விருக்கும் மக்களைப்போல கீழ்ப்பட்ட வருத்த மெல்லாம் தீரும்படி வந்து கிட்டப்பெற்றோம், கிங்கிணி ... விழியாவோ - (ஆதலின்) கிண்கிணி (சதங்கை)யைப்போல் பாதி மலர்ந்த செந்தாமரை மலர்போன்று அன்பினாலே சிவந்திருக்கிற திருக்கண்களைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சார்ந்தவர்களான எங்கள் பக்கல் விழிக்கலாகாதோ, திங்களும் ... இழிந்து - சந்திர சூரியர் தோன்றினாற்போன்ற அழகிய இரு கண்களால், எங்களைக் கடாட்சிப்பராயாகில், எங்களுடைய பாவம் யாவும் கழிந்துவிடும். (உஉ)

## விருப்பத்தை உசாவி அருளவேண்டும் என்றல்

மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா! உன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்கா சனத்துஇருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.

(பொருள்) மாரி ... விழித்து - மழைக்காலத்தில் மலைக்குகையில் பெடையும் தானும் ஒன்றெனுமாறு ஒட்டிக்கொண்டு கிடந்துறங்காநின்ற வீரச்சிறப்புடைய அரிமாவானது உணர்ந்தெழுந்து (பகைவர்கள்பால் சீற்றத்தாலே) அனற்பொறி சிதறும்படி கண்களை விழித்து, வேரி ... புறப்பட்டு - உளைமயிரானது சிலும்பும்படி நாலுபக்கத்திலும் புடைபெயர்ந்து (அசைந்து) உடம்பை உதறிப் பெருமைதோன்ற நிமிர்ந்து பேரொலி செய்து குகையினின்றும் புறப்பட்டு, போதரு ... கோப்புடைய - வருவதுபோல காயாம்பூப்போன்ற திருநிறத்தை யுடையவனே நீ உன்னுடைய கோயிலிலிருந்து இம் மணிமண்டபத்துக்கு எழுந்தருளிப் பலவகை வேலைப்பாடுகள் பொருந்திய, சீரிய ... அருள்-சீர்மையுடைத்தான இவ் அரியணையில் எழுந்தருளியிருந்து நாங்கள் விரும்பி வந்த காரியத்தை உசாவிக் கிருபை (தலையளி) செய்யவேண்டும் (என்று இரக்கிறார்கள்).

(முழைஞ்சு - குகை. தீ - நெருப்புப்போன்ற ஒளியுள்ள கண். வேரி - மணம். மூரி - வலிமை; பெருமை. போதருதல் - வருதல்.) (உங)

## போற்றித் தொடர்புகன்று புரவலனை வேண்டல்

அன்றுஇவ் வுலகம் அளந்தாய்! அடிபோற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல்போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய்! கழல்போற்றி
குன்று குடையாய் எடுத்தாய்! குணம்போற்றி
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய்.

(பொருள்) அன்று ... இரங்கு - தங்கள் வாழ்வை மாபலி கவரத் தேவர்கள் வருந்திய அக்காலத்தில் இவ்வுலகை மாவலிபால் இரந்து நீரேற்று இரண்டடியாலே அளந்த உன் திருவடிகளுக்கு மங்களமுண்டாகக்கடவது; இராவணனிருந்த இலங்கையை அழித்தருளியவனே உன் திருத்தோள்வலிக்கு மங்களமுண்டாகக்கடவது; உருமாய்ந்து போமாறு சகடாசுரனை உதைத்தவனே உன்புகழுக்கு மங்களமுண்டாகக்கடவது; கன்றின் வடிவு கொண்டு வந்து வத்சாசுரனை எறிகருவியாகக்கொண்டு (விளாவின் வடிவாய்நின்ற கபித்தாசுரன்மேல்,) எறிந்து இருவரையும் முடித்தவனே உன் திருவடிகளுக்கு மங்களமுண்டாகக்கடவது; கோவர்த்தனமென்னும் மலையைக்குடையாக எடுத்துக் காத்தவனே உன் தண்ணளிக்கு மங்களமுண்டாகக்கடவது; பகைவர்களை வேரோடு அழிக்கும் தன்மையதான உனது திருக்கை வேலுக்கு மங்களமுண்டாகக்கடவது; என்று இவ்வாறாக உனது வீர சரிதங்களைச் சொல்லி உன்னை அனுபவிக்கைக்காக நாங்கள் இன்று வந்தோம் கருணைசெய்தருள வேண்டும். (உச)

## ஒளித்து வளர்ந்தாய் உன்னைப்பாட அருளென்றல்

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
  ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்
தரிக்கிலா னாகித் தான்தீங்கு நினைந்த
  கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
  அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
  வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) ஒருத்தி ... வளர-தேவகிப்பிராட்டியாராகிய ஒருத்திக்குப் பிள்ளையாய்த் திருவவதரித்து அந்த இரவில்தானே ஒப்பற்ற யசோதைப்பிராட்டிக்குத் திருமகனாக ஒளித்து வளருங்கால், தரிக்கிலா ... பிழைப்பித்து- அதனைப் பொறாது உன்னைக் கொல்லவேண்டும் என்று பொல்லாங்கை நினைத்த கஞ்சனுடைய எண்ணத்தைப் பயனற்றதாக்கி, கஞ்சன் ... நெடுமாலே - அவன் வயிற்றில் நெருப்புப்போல் அழலநின்ற சார்ந்தார்பால் பெரும் பித்தனானவனே, உன்னை ... தருதியாகில் - உன்பக்கல் உறுதிப்பொருளை இரந்து வந்து வேண்டினோம் நாங்கள் உன்னியதைச் செய்வாயானால், திருத் ... மகிழ்ந்து - பிராட்டியும் விரும்பத்தக்க உனது சம்பத்தையும், வீரியத்தையும் நாங்கள் உகப்புடன் பாடி உன்னைப் பிரிந்துபடும் துன்பம் நீங்கி மகிழ்வோம். (உரு)

## மார்கழி நீராட வேண்டுவன அருளென்றல்

மாலே! மணிவண்ணா! மார்கழிநீ ராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துஉன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே! கொடியே! விதானமே!
ஆலி னிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்.

(பொருள்) மாலே ... கேட்டியேல் - சார்ந்தவரிடம் பேரன்பு வாய்ந்தவனே! ஆலந்தளிரில் பள்ளிகொள்பவனே! நீலமணி போன்ற வடிவுடையவனே! உத்தமப் பெரியோர்களால் மேற்கொள்ளப்பட்ட மார்கழி நீராட்டத்தை நாங்கள் செய்யும் பொருட்டு வேண்டியவைகள் யாவை என்று கேட்பாயாகில், ஞாலத்தை ... போல்வன - பூமியெல்லாம் நடுங்குமாறு ஒலிப்பனவும் பால்போல் நிறத்தையுடைய உன்னுடைய ஸ்ரீ பாஞ்சசன்னியத்தை யொத்தனவுமான, சங்கங்கள்...பறையே - சங்கங்களும் மிக்க பெருமையும் பெரிதுமாயுள்ள பறை ஆகிய வாச்சியங்களும், பல்லாண்டு ... அருள் - பல்லாண்டு பாடுபவர்களும் மங்கள தீபங்களும் கொடிகளும் மேற்கட்டிகளும் ஆகும் இவற்றை நீ எங்களுக்கு அளித்தருள வேண்டும் (என்கிறார்கள்).

(ஞாலம் - உலகம். முரல்வன - ஒலிப்பன. பாஞ்ச சன்யம் - இறைவன் இடக்கையிலுள்ள பாஞ்சசன்யம் என்னும் பெயருடைய சங்கு.) (உசு)

## அழகுறுத்தி உடனிருந்து உண்ண அருள் என்றல்

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

(பொருள்) கூடாரை ... சம்மானம் - தன் அடியைத் தொழாதவரை வெற்றிகொள்ளும் குணத்தையுடைய கண்ணபிரானே! உன்னை அன்போடு பாடிப் பறையைப்பெற்றுப் பின்னும் நாங்கள் பெறும்படியான பரிசுகள் யாவை எனில், நாடு ... வளையே - நாட்டார் புகழுகைக்கு ஈடாக முன்கைச்சரியும் தோளுக்கிடும் அணிகலனான தோள்வளையும், தோடே ... அணிவோம் - தோடும் கர்ணப்பூவும் (காலணியாகிய) பாடகமும் என்றாற்போல் சொல்லப்பட்ட பலவகையான அணிகளும் (நீயும் நப்பின்னைப் பிராட்டியுமாக இருந்து பூட்ட) நாங்கள் நன்றாக அணிவோம், ஆடை ... குளிர்ந்து - திருப்பரிவட்டங்களை (நீ உடுத்த) உடுப்போம், அதற்குப் பின்பு பாற்சோறானது மறையும்படி நெய் பரிமாறி முழங்கையால் வழியும்படியாக உண்டு (நீயும் நாங்களுமாகக்) கூடியிருந்து இன்புற்றுக் குளிரவேண்டும் (என்கிறார்கள்). (உஎ)

## வெகுளாது எங்கட்கு வேண்டுவன அருளென்றல்

கறவைகள் பின்சென்று கானம்சேர்ந் துண்போம்
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்று மில்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்குஇங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே
இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்.

(பொருள்) கறவைகள் ...... ஆய்க்குலத்து - பசுக்களின் பின்னேபோய்க் காட்டிலே பொருந்தி உடம்போம்பி உண்டு திரிபுமவர்களாயும் சற்றேனும் அறிவுமில்லாத இடைக்குலத்திற் பிறந்த நாங்கள், உன் ... உடையோம் - உன்னை ஒத்த குலத்தானாகப் பெறத்தக்க புண்ணியத்தை உடையவர்களாயும் இராநின்றோம், குறைவொன்று...ஒழியாது - ஒருவகைக் குறையும் இல்லாதவனாய்க்கோவிந்தனென்னும்பெயரையுடையனாய் உள்ள சுவாமியானவனே, உன்றன்னோடு (எங்களுக்கு உண்டான) தொடர்பு இங்கே உன்னாலும் எங்களாலும் ஒழிக்கமுடியாது, அறியாத ... பறை - (ஆதலால் உலகவழக்கம் ஒன்றும்) அறியாத சிறுமிகளாகிய நாங்கள் உன்னை அன்பாலே (நாராயணன் என்ற) சிறிய பெயராலே அழைத்ததைக் குறித்து அன்பரைப் பெரிதும் விரும்புகிறீர்; வெகுளாமல் நாங்கள் வேண்டிய பறையைத் தந்தருள வேண்டும் (என்கிறார்கள்). (உஅ)

## எந்நாளும் அடிமையாயிருக்க வேண்டல்

சிற்றஞ் சிறுகாலே வந்துஉன்னைச் சேவித்துஉன்
பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.

(பொருள்) **கோவிந்தா** - பசுக்களைக் காக்கும் கண்ணபிரானே, **சிற்றம்...கேளாய்** - மிகவும் விடியற்காலையிலே இங்கு வந்து தேவரீரை வழிபட்டுத் தேவரீருடைய அழகிய தாமரை மலர்போன்ற திருவடிகளை மங்களாசாசனம் பண்ணுகைக்குப் பயனைக் கேட்டருள வேண்டும், **பெற்றம்...போகாது** - பசுக்களை மேய்த்துப் பின்பு உண்ணும் இடைக்குலத்தில் திருவவதரித்த தேவரீர் எங்களிடத்தில் அந்தரங்க கைங்கர்யங்களைப் பெற்றுக் கொள்ளாமல் இருத்தல் கூடாது, **இற்றைப் ... பிறவிக்கும்** - பசுக்களைக் காப்பாற்றுபவரே தாங்கள் கொடுக்கும் பறையைப் பெற்று இன்றைக்கு அகலுகைக்கு நாங்கள் வந்தோமல்லோம் காலமுள்ளதனையும் (தேவரீருடைய) எவ்வவதாரங்களிலும், **உன் தன்னோடு...மாற்று** - தேவரீருடைய உறவு உடையவர்களாகக் கடவோம் (அநந்யார்ஹைகளா யிருக்கவேண்டும்) தேவரீருக்கே நாங்கள் அடிமை செய்யக் கடவோம்; எங்களுக்கு வேறு பொருளில் உண்டாகும் விருப்பங்களைத் தவிர்த்தருள வேண்டும் (என்கிறார்கள்). (௨௯)

## தமிழ்மாலை முப்பதால் சார்வர் பேரின்பு

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பா ரீரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற்று இன்புறுவ ரெம்பாவாய்.

(பொருள்) வங்கக்... இறைஞ்சி - கப்பல்களையுடைய திருப் பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிழ்தம் தந்தருளின திருமகள் நாதனான கண்ணபிரானை நிறைமதியை ஒத்த அழகிய முகத்தையும் செவ்விய அணிகலன்களையும் உடைய ஆயர்மகளிர் சென்று வணங்கி மங்களாசாசனம் பண்ணி, அங்கப் ... சொன்ன-அத்திரு ஆய்ப்பாடியில் நாட்டுக்குப் பறையென்றொரு தலைக் கிட்டையிட்டுத் தாங்கள் அடிமையைக் கைக்கொண்ட வரலாற்றை அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்தவரும் குளிர்ந்த புதிய தாமரை மலர்களாலாகிய மாலையை உடையவரும் பிராமண உத்தமரான பெரியாழ்வாருடைய திருமகளாரானவரு மான ஆண்டாள் அருளிச்செய்த, சங்கத்...இன்புறு-(ஆயர்மகளிர்) திரள் திரளாகக்கூடி அனுபவித்த பிரபந்தமாய்த் தமிழ்ப் பாமாலையான முப்பது பாசுரங்களையும் தப்பாமல் இந்தச் சமுசாரத்திலே இப்பாசுர மாத்திரத்தைச் சொல்லுமவர்கள் எல்லா இடங்களிலும் பெரிய மலையையொத்துத் திண்ணிதாயிருந்துள்ள நான்கு திருத்தோள்களையும் சிவந்த திருக்கண்களையும் அழகிய திருமுக மண்டலத்தையு முடையனாய் (நித்திய விபூதியும் லீலா விபூதியுமாகிற) செல்வத்தையுடையனாய்த் திருமகள்நாதனாய் உள்ள நாராயணன் அருளப்பெற்றுப் பேரின்பத்துடன் வாழ்வர். (௩0)

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்

## குழந்தைகள் காலையில் படுக்கையைவிட்டு எழுந்தவுடன் அடியிற்கண்ட பாசுரத்தைச் சொல்லித் துதிக்கவும்

சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்,
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது;
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு
உற்றோமே யாவோம்; உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.

(திருப்பாவை-20)



## இரவு படுக்கப் போகும்முன் அடியிற்கண்ட பாசுரத்தைச் சொல்லித் துதிக்கவும்

பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்;
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே!
பேதை ஒருபால், திருமேனி ஒன்றல்லன்;
வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகாள்
ஏதவனூர்? ஏதவன்பேர்? ஆர்உற்றார்? ஆர் அயலார்?
ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய்!

(திருவெம்பாவை 10)

''குறைவில்லாத இன்பவாழ்வு அடைவார்''
என்பது உறுதி

ஓம் சக்தி

# "வெற்றிதரும் வேற்காடு"

## அருள்திரு தேவி கருமாரியம்மன் திருக்கோயில்

## திருவேற்காடு : : சென்னை-77

திருக்கோயில் சாதாரண நாட்களில் காலை 4-30 மணிக்கு கோபூஜையுடன் திறக்கப்பட்டு இரவு 10-00 மணிவரை திறந்திருக்கும்.

ஞாயிறு மற்றும் இதர விசேட நாட்களில் காலை 3 மணி முதல் இரவு 12 மணிவரை திறந்திருக்கும்.

அபிடேக நேரங்கள்:-

சாதாரண நாட்கள்:- காலை 8-00, முற்பகல் 11 மணி, மாலை 6-00 மணி.

ஞாயிறு மற்றும் விசேட நாட்கள்:- அதிகாலை 4-30 மணி, முற்பகல் 11 மணி, மாலை 6 மணி.

### அம்மனுக்கு தங்கத்தேர் பவனி செய்து வைக்க காணிக்கை ரூ. 501-00

அம்மனுக்கு நவகலசம் அபிடேகம், 1008 கலச அபிடேகம் 1008 சங்காபிடேகம் ஆகியவை செவ்வாய், வெள்ளி, ஞாயிறு நாட்களில் செய்து வைப்பது, நலமெல்லாம் பெறச் செய்யும்.

திருவேற்காடு சென்னை-பூந்தமல்லி, நெடுஞ்சாலையில், சென்னையிலிருந்து 16 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள வேலப்பன் சாவடியிலிருந்து 2½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. சென்னையின் பல பாகங்களிலிருந்தும் 50, 59, 29E, 27C, 20D ஆகிய தடங்களின் பல்லவன் போக்குவரத்தால் பேருந்துகள் வந்து செல்கின்றன. ஞாயிறு நாட்களில் விசேட பேருந்துகள் விடப்பட்டுள்ளன. ஞாயிறு நாட்களில் விசேட பேருந்துகள் சென்னையின் பல பாகங்களிலிருந்தும் மாங்காட்டிலிருந்தும் பூந்தமல்லியிலிருந்தும், திருவேற்காடு வந்து செல்கின்றன.

இங்ஙனம்

| | | |
|---|---|---|
| சுவாமி இராமதாசர், தேவி உபாசகர். | M. P. நாராயணன், தக்கார். | இரா. தண்டபாணி B.sc., B. L., துணை ஆணையர்/செயல் அலுவலர். |

நவஜோதி அச்சகம், சென்னை-2